உ

கணபதி துணை

கொங்குவேளிர் இயற்றிய

# பெருங்கதை மூலம்



இது

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி

## டாக்டர் உ. வே. சாமிநாதையரால்

பரிசோதித்து

நூதனமாக எழுதிய கதைச்சுருக்கம் அபிதானவிளக்கம்
அரும்பதவகராதி என்பவற்றுடன்

சென்னை:

கேசரி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.



முதற் பதிப்பு

யுவ ஞு மார்கழி மீ

1935

 [விலை ரூ. 3—0—0

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

## விளம்பரம்.

| | | |
|---|---|---|
| | | ரூ. அ. பை. |
| பெருங்கதை மூலமும் குறிப்புரை முதலியனவும் (இரண்டாம் பதிப்பு) | ... | 7—0—0 |
| ௸ இலாவாண காண்டம் | ... | 1—8—0 |
| பெருங்கதையின் சரித்திரத் தலைவனாகிய உதயணன் சரித்திரச் சுருக்கம் | ... | 1—0—0 |
| உதயண குமார காவியம் ... | ... | 0—6—0 |

# முகவுரை

பெருங்கதையென்பது பெருங்கவிஞராகிய கொங்குவேளி ரென்பவரால் இயற்றப்பெற்ற ஒரு தொடர்நிலைச் செய்யுள்; குரு குலத்திற் பிறந்தவனும் கௌசாம்பி நகரத்தரசனுமான சதானிக னுடைய புதல்வன் உதயணனது சரித்திரத்தை விரித்துக் கூறுவது; சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்தது; அருங்கலை விநோதர் களுக்கு நல்விருந்தாகிப் பலவகையான சுவைகளைப் புலப்படுத்தி அவர்கள் உள்ளத்தைப் பிணிக்கும் தன்மையையுடையது. பண் டைக் காலத்திய அருமையான பல செய்திகள் இந்நூலால் தெரிய வரும்.

இது கொங்குவேண்மாக்கதையெனவும் கதையெனவும் உத யணன்கதையெனவும் வழங்கும். இதற்கு முதனூல் கங்கதேசத்தரச னாகிய துர்விநீதனென்பவனால் வடமொழியில் இயற்றப்பெற்ற பிரு கத்கதா என்று தெரியவருகிறது.

உஞ்சைக் காண்டம், இலாவாண காண்டம், மகத காண்டம், வத் தவ காண்டம், நரவாண காண்டம், துறவுக் காண்டம் என்னும் ஆறு பேருறுப்புக்களும் ஒவ்வொரு காண்டத்திற்கும் பல சிற்றுறுப்புக்களும் இதில் உள்ளன. சிற்றுறுப்புக்களெல்லாம் காதையென வழங்கப்படும். அவையாவும் நிலைமண்டில ஆசிரியப்பாக்களாகும்.

இந்நூலில் இப்பொழுது கிடைத்துள்ள பகுதிகள் உஞ்சைக் காண்டத்தின் ௩உ-ஆம் காதைமுதல் நரவாண காண்டத்தில் ௯-ஆம் காதை வரையில் உள்ளனவே. இவற்றுள்ளும் முதலில்லாதன மூன்று; இறுதியில்லாதன மூன்று; முற்றுமில்லாதவொன்று.

இந்நூலின் மூலம் மட்டும் தனியே பதிப்பிக்கப்பட்டால் அடிக் கடி படித்து இன்புறலாமென்று சில அன்பர்கள் விரும்பியபடி இதனை அபிதான விளக்கம், கதைச் சுருக்கம், அரும்பத அகராதி முதலியவற் றுடன் தனியே வெளியிடலானேன்.

பெருங்கதையைப்பற்றியும், அதன் நூலாசிரியரைப்பற்றியும் உள்ள விரிவான செய்திகள் மூலமும் குறிப்புரை முதலியனவும் அடங்கிய பெரிய புத்தகத்திற் காணலாம்.

'தியாகராஜ விலாஸம்'
திருவேட்டீசுவரன்பேட்டை,
30—12—35

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

# பிழையும் திருத்தமும்



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௨௬ | 16 | வாசவத்தையின் ... | வாசவதத்தையின் |
| ௧௫ | 5 | கக்சினர் ... | கச்சினர். |
| ௮௫ | 5 | கொடுத்த ... | தொடுத்த |
| ௧௨௭ | 1 | ௨௨௭ ... | ௧௨௭ |
| ௨0௭ | 33 | நாமரவளியுங் ... | நாமாவளியுங் |
| ௨௭௨ | 8 | யாக்கி ... | யரக்கி. |
| ௨௮௫ | 25 | முதற்புகுத்தலிற் ... | முதறபுத்தலிற் |
| ௩௧௧ | 29 | யுரூஅத் ... | யரூஅத் |
| ௩௩௧ | 25 | புண்கண் ... | புன்கண் |
| ௩௪௩ | 31 | யிகற்குரல் ... | கயிற் குரல் |
| ௫௧௮ | 29 | கிளையின் மன்னர் ... | கிளையன் மன்னர் |

உ

# அபிதான விளக்கம்.

(அபிதானம்—பெயர்.)

அங்கநாடு :—விசயவரனென்னும் அரசனுடைய நாடு.

அச்சுவப்பெருமகன் :—கேகயநாட்டின் அரசன்; குற்றமற்ற புகழை யுடையவன்; முடியுடைமன்னன்; மிக்க வீரன்; பதுமாபதியை மணஞ்செய்யவிரும்பிக் கொடுத்தற்குரிய பரிசமுதலியவற்றுடன்வந்து அவள் தமையனாகிய தருசகனைக்கண்டு தன் கருத்தைக்கூறி அவனது உடன்பாட்டைப்பெற்று உடனிருந்த காலத்தில் அவனோடு போர்செய்தற்கு வந்த பகைவருடன் யுத்தஞ்செய்தற்கு வலிந்துபோய்ப் பொருது எலிச்செவியரசனாற் கொல்லப்பட்டவன்.

அடவி நன்னாடு ஐம்பது :—இடவகனுக்குச் சீவிதமாக உதயணனாற் கொடுக்கப்பட்ட ஐம்பது நாடுகள்.

அத்தினபுரத்தரசர் :—தருசகனோடு போர்செய்ய வந்தவர்களுள் ஒருவனான எலிச்செவி யரசனுடைய முன்னோர்.

அமராபதி :—அமராவதி; இந்திரனது நகர்.

அமரிகை :—சாலிநாட்டிலிருந்த ஒரு கணிகை.

அயோத்தியரசன் :—தருசகனோடு போர் செய்தற்கு வந்து தோல்வியுற்றுச் சென்ற அரசர்களுள் ஒருவன்.

அரிசிகன் :—உருமண்ணுவாவின் புதல்வன்.

அரிமான் :—தருசகனோடு பகைமைகொண்டொழுகிய அரசர்களுள் ஒருவன்.

அருஞ்சுகன் :—உச்சையினிலிருந்த ஓர் அந்தணப் பிரமசாரி; வேத முதலியவற்றை ஓதியுணர்ந்தவன்; யாழ்வகையையும் பிறநூல்களையும் நன்கு அறிந்தவன்; கோடபதியென்னும் யாழைக் கண்டெடுத்து உதயணனிடம் கொடுத்தவன்.

அருட்டநகர் :—உச்சைனிக்கும் சயந்திநகருக்கும் இடையே யுள்ளது.

அவந்தி :—பிரச்சோதனன் அரசனது நாடு; இதன் தலைநகர் உச்சைனி.

அனங்கவிலாசனி :—காந்தருவபுரத்து அரசனான நீலவேகனது புத்திரி; நரவாணதத்தனால் மணஞ்செய்து கொள்ளப்பட்டாள்.

ஆதித்தியதருமன் :—ஒரு வீரன்.

ஆப்பியாயினி :—பதுமையின் பார்ப்பனத்தோழி; அவளோடு ஒருங்கு வளர்ந்தவள்; அவள் தனியே ஆலோசித்தற்குரிய உயிர்த் துணைவி; தோழமைக்குரிய இயல்புகளிற் சிறந்தவள்; இவளாற் பதுமையடைந்த பயன்கள் பல; உதயணனுடைய பார்ப்பனத் தோழனாகிய இசைச்சனென்பவனால் இவள் மணஞ்செய்துகொள்ளப்பட்டாள்; ஒழுக்கினும் குலத்தினும் விழுப்பமிக்கவள்; இப்பெயர் யாப்பியாயினியெனவும் வழங்கும்.

ஆப்பியை :—சாலங்காயனுடைய தங்கை; பிரச்சோதன அரசன் விரும்பியபடி யூகிக்கு மணஞ் செய்விக்கப்பட்டாள். யாப்பியை யெனவும் வழங்கப்படுவாள்.

ஆரியை :—பதுமையின் தோழி; அவளுடைய மனக்குறிப்பறிந்தே ஒழுகுபவள்; மிக்க மேன்மையையுடையவள்; பந்தடித்தலில் மிக்க ஆற்றல் வாய்ந்தவள்.

ஆருணியரசன் :—பாஞ்சாலதேயத்தரசன்; மிக்க பராக்கிரமமும் வீரியமுமுள்ள சேனையையுடையவன்; கோசல தேயத்தரசனை வென்று அவனது ஊரையழித்து அவன் மகள் வாசவதத்தை முதலியவர்களைப் பிடித்துவந்து தன் உரிமைமகளிர்க்குத் தாதியர்களாக அமைத்தனன்; இவனுக்குக் கார்த்தவீரியனை உவமை கூறியிருக்கின்றனர்; இவன் பட்டத்து யானைக்கு மந்தரமென்று பெயர்; ஏயர்குலத்தாரோடு குலப்பகைஞனாதலின், அக்குல அரசாட்சிக்கு உரியனான உதயணன் சிறைப்பட்டபொழுது, பெரும்படையோடு சென்று கோசம்பி நகரத்தைக் கைப்பற்றி முரசறைவித்துத் தன் கொற்றத்தை யாவர்க்கும் தெரிவித்து அந்நகரையே தனது இராசதானியாகக்கொண்டு பின்பு ஆட்சிபுரிந்தனன்; காளமயிடனென்னும் ஒற்றனாற் பகைப்புலத்தே நிகழும் செய்திகளை அறிந்துவந்தவன்; பூரணகுண்டலனென்பவன் இவனுக்கு முக்கியமான மந்திரி; பின்பு உதயணன் வந்துசெய்த பெரும்போரில் அவனாற் கொல்லப்பட்டான்; அவனால் வெட்டுண்டபோது இவன்பால் அச்சக்குறிகள் சிறிதும் நிகழவேயில்லை; இவன் பாஞ்சாலராசன், பாஞ்சாலராயனென்னும் வழங்கப்படுவான்.

ஆலங்கானம் :—இப்பெயருடையவை இரண்டு; ஒன்று விபுலகிரியின் பக்கத்தில் மிருகாவதியின் தந்தை தவஞ்செய்துகொண்டிருந்த இடம்; மற்றொன்று, பூக்கொய்தற்கமைந்த பத்திராபதி

யென்னுந் தெய்வமகள் யானையின் சேர்க்கையைக்கண்டு மனம் வேறுபட்டுப் பெண்யானையாகப் பிறக்கும்படி குபேரனாற் சாபம் பெற்ற இடம்; இது விந்தமலையின் பக்கத்தே நருமதையாற்றங் கரையிலுள்ளது.

இசைச்சன்:—உதயணனுடைய பார்ப்பனத்தோழன்; அவனுடைய அமைச்சனாகவுங் கூறப்படுவன்; இளமையில் இருமுது குரவரையுமிழந்தோன்; வாசவதத்தையையும் யூகியையுமிழந்த தனால் மிகுந்த கவலையுற்று மெலிந்த உதயணனைத்தேற்றி அவனை வேற்றுவடிவங் கொள்வித்து மற்றைத்தோழர்களோடு இராசகிரியநகர்க்கு அழைத்துச் சென்றவன்; சென்றவிடத்துக்காமன் கோட்டத்தின் வாயிலிற்காணப்பட்ட பதுமாபதி தன்னை விரும்பினாளென்று வேட்கையுற்ற உதயணனுக்கு மகததேயத்துமகளிரது நிறையுடைமையைக்கூறி அவனது காமவேகத்தைத் தணிவித்தவன்; அவன் பதுமாபதியின் கன்னிமாடத்தில் வேற்றுவடிவங்கொண்டு மறைந்திருந்த காலத்தில் மற்றத் தோழர்களோடு தானும் வேற்றுவடிவங்கொண்டு அயலிடத்தேயிருந்து அவனைப் பாதுகாத்துவந்தான்; தருசகனோடு பெரும்போர் புரிதற்குவந்த பகைவரை எதிர்த்தற்குச் சென்ற உதயணனுக்குத் துணையாகச் சென்றவன்; ஆப்பியாயினியை மணஞ்செய்து கொண்டவன்; மிக்க வருவாயையுடைய பல ஊர்களைச் சீவிதமாக உதயணன்பாற் பெற்றவன்.

இடவகன்:—உதயணனுடைய மந்திரிகளில் ஒருவன்; அவனுடைய உயிர்த்தோழன்; சூழ்ச்சி, வாய்மை, நன்றியறிவு, வீரம் இவை இவனுடைய சிறப்புக்குணங்கள்; மனங்குளிர்ந்து உதயணனாற் பாராட்டப்பெற்ற பெருமை வாய்ந்தவன்; உஞ்சைநகரத்திலிருந்து பிறர் அறியாதபடி நேரே தன்பால் தனியேவந்து வினவிய யூகிக்கு உதயணன் செய்தி முழுவதையுங்கூறி மேலே ஆகவேண்டியவற்றை அவன் ஆராய்ந்து செய்யும்படி தூண்டியவன்; தருசகன் பொருட்டுப் பகைவரோடு போர்செய்தற்கு உதயணன் சென்றபொழுது அவனுக்குத் துணையாகப் பல்வீரர்களுடன் சென்று போர் செய்து வெற்றியுடையும்படி செய்தவன்; உதயணனால் இவன் சீவிதமாகப் பெற்றவை புட்பகமென்னும் நகரமும், சிறுநாடுகள் ஐம்பதும், பிறவருவாய்களும்; இவன் புட்பகத்தைத் தலைநகராக்கி அரசாட்சி செய்து வந்தவன்; அவ்வப்பொழுது சென்று உதயணனுக்கு வேண்டியவைகளைச்

செய்து வருபவனாக இருந்தான்; பலதேயங்களையும் எளிதிற் பார்த்து வருதற்கு வாசவதத்தையோடு உதயணன் ஏறிச் சென்ற விமானத்திற் சென்றவர்களில் இவனும் ஒருவன்; இவன் பெயர் இடபகன் எனவும் வழங்கும்.

இரத்தினபுரம் :—காந்தாரநாட்டிலுள்ளதொரு நகரம்.

இராசகிரியம் :—புகழ்பெற்றதும் மிகப் பழமையானதுமான ஒரு பெரிய நகரம்; பலவகை நுகர்ச்சிகளையுடைமையாலும் அச்சத்தை விளைவித்தலாலும் பவணலோகத்தையும் செல்வமிகுதியால் அமராவதியையும் ஒப்பது; மகதநாட்டின் தலைநகர்; இதன்புறத்தே யவனச்சேரிகள் நூறும் எறிபடைப்பாடிகள் நூற்றறுபதும் தமிழவீரர்களின் சேரிகள் ஆயிரமும் கொல்லர் சேரிகள் பலவும் மிலேச்சச்சேரிகள் பலவும் சித்திரசாலைகள் முதலிய பல்வகையிடங்களும் தண்ணீர்ப்பந்தல் முதலிய பல தருமத்தானங்களும் பலவகைத் தேவாலயங்களும் இருந்தன; அழகிய அகழிகளாலும் பல உறுப்புக்கள் வாய்ந்த மதில்களாலும் சூழப்பெற்ற இதன் அகநகரில் பெரும்படைச்சேரி, போகச்சேரி, உழவர்சேரி, வணிகர்சேரி, அந்தணர்சேரி, அமைச்சர் சேரி முதலியன அமைந்த வீதிகள் பலவற்றாற் சூழப்பெற்று இடையே விளங்கும் இராசமாளிகை, ஒரு தாமரை மலரிற் பல வகை யிதழ்கள் சூழப்பெற்ற பூம்பொகுட்டைப்போல விளங்கியது; இதனரசன் தருசகனென்பவன்; உதயணன் பார்ப்பனப்பிரமசாரி வடிவங்கொண்டு தோழர் முதலியவர்களுடன் சில மாதங்கள் மறைந்திருந்து தருசகனுக்கு உதவிசெய்து பின்பு அவனுடைய நட்பைப் பெற்று அவன் தங்கையாகிய பதுமையை மணந்து சிலநாள் இதில் தங்கியிருந்தனன்; இஃது இராசகிரியெனவும் வழங்கும்.

இராசனை :—பதுமையின் தோழி; மிக்க அழகுடையவள்; உதயணனது விருப்பின்படி இவளை உருமண்ணுவா மணஞ்செய்துகொண்டான்; பந்தாட்டத்தில் தேர்ச்சியுள்ளவள்.

இலாமயன் :—அந்தணன்; இனியமொழியையுடையவன்; மந்திர வித்தையிற் சிறந்தவன்; உதயணனுக்கு இவன்பால் நன்கு மதிப்புண்டு; இவனிருந்த இடம் காளவனமென்பது; "வாசவதத்தை தீக்கிரையாயினள்; இனி யாது செய்வேம்" என்று மிக்க வருத்தமடைந்து செயலற்றிருந்த உதயணன் இவனிருந்த இடமும் தீக்கிரையாயிற்றென்று தேறுதலுறாமையால்

எந்தப்பொருளுக்கும் அழிவுண்டு என்பதையறிந்து தெளிந்து ஆறுதலையடைந்தான்.

இலாவாணகம்:—இஃது உதயணனுக்குரிய பெரியநகர்களுள் ஒன்று; பகைவர் வருதற்கு மிக அஞ்சும் பேரரண்கள் முதலியவற்றையும் இடையே மிக அழகிய ஓர் அரண்மனையையும் உடையது; இதன்பக்கத்தே பல்வகைவளமுள்ள ஒருமலையுண்டு; அதன் சாரல் மிக்க இன்பம் பயப்பதாக இருந்தது; உண்டாட்டுக்குரிய பலவகைமரங்கள் கொடிகளையுடைய பூஞ்சோலைகளும் சுனைமுதலிய நீர்நிலைகளும் படமாடமுதலியன அமைத்தற்குரிய இடவிசேடங்களும் இச்சாரலில் இருந்தன; முனிவுராச்சிரமங்களும் தேவாலயங்களும் மேற்கூறிய சோலைகளில் உண்டு; தவஞ்செய்துவந்த ஓர் அரசமுனிவருடைய புத்திரியாகிய விரிசிகையென்னுங் கன்னியின் வேண்டுகோட்கிரங்கி அவள்கொடுத்த பலவகை மலர்களைக் கண்ணிமுதலியனவாகக்கட்டி உதயணன் சூட்டியது அச்சோலைகளுள் ஒன்றிலேதான்; அக்கன்னி வேறொன்றையும் அணியாமல் அம்மாலையுடனேயிருந்து முயன்று உதயணனுக்குத் தேவியாயினள்; உருமண்ணுவாவிற்கு அவனாற்கொடுக்கப்பட்ட சீவிதங்களுள் இந்நகரம் ஒன்று; இஃது இலாவாணமென்றும் வழங்கும்.

உக்கிரகுலம்:—சைன நூல்களிற் காணப்படும் *ஐந்து குலங்களுள் ஒன்று; இக்குலத்திற் பிறந்தவன் சண்பை நகரத்தரசனான விச்சுவரனென்பவன்.

உஞ்சேனை:—உச்சைனிநகரம்; உஞ்சையெனவும் வழங்கும்; அவந்தி நாட்டிலுள்ளது; பிரச்சோதனனுடைய இராசதானி; மதில் முதலிய அரண்களாலும் சேனைகளாலும் பலவகைச் செல்வங்களாலும் சிறப்பு அமைதிகளாலும் சிறப்புற்றது; குளிர்ச்சியும் பலவகை நுகர்ச்சியும் இதில் அதிகம்; அந்நகர் புறநகர்களின் பாகுபாடுகளிலும் மிக்கது; யாதொரு குற்றமுமில்லாதது; சத்துருபயம் இதற்கில்லை; இதில் வாழ்வோர் பெரும்பாலும் முருகக்கடவுளை வழிபடுவாரென்று தெரிகிறது; இது பேர்நகர், மாநகரெனவும் வழங்கப்படும்; இதனயலில் மகாகாளவனம் அல்லது காளவனமென்ற ஒரு வனமும் அதில் ஒரு காளிகோயில் முதலியனவும் ஒரு நதியும் அந்நதி

* மற்றவைகளாவன: இக்ஷ்வாகுகுலம், ஹரிகுலம், குருகுலம், நாதகுலம் என்பவை.

பாயப்பெற்று ஒருயோசனை அளவுள்ளதான ஒரு பொய்கையு முண்டு; அந்நதியின் இருகரையிலும் அப்பொய்கைக் கரையி லும் இந்நகரத்தார் வருடத்திற்கு ஒருமுறை நீர்விழா அயரா நிற்பர்; உதயணன், வஞ்சனையாற் பிடிக்கப்பட்டுச் சிறையிலிருந் ததுமுதல் வாசவதத்தையை அவன் பிடிமேலேற்றிச்சென்றது இறுதியாகவுள்ள கதைப்பகுதி இந்நகரில் நிகழ்ந்தது. இந்நகரம் அவந்தியென்றும் கூறப்படும்; இது முத்திநகரம் ஏழனுள் ஒன்று; பழைய நூல்களாலும் சிலாசாசனங்களாலும் இதிற் சைனமுனிவர் பலரிருந்ததாகத் தெரிகிறது; வடநூல்கள் பல வற்றிலும் சிலப்பதிகாரம், யசோதரகாவிய முதலிய தமிழ்நூல் களிலும் மிகப் பாராட்டப்பட்டுள்ளது; உச்சைனிமகாகாளமென் னும் ஒரு சிவக்ஷேத்திரம் இதில் உண்டு.

உதயணன்:—இவன் இந்நூற் கதாநாயகன்; குருகுலத்திற் பிறந் தவன்; சதானிகனுக்கு மிருகாவதிபாற்றோன்றியவன்; இவன் நாடு வத்தவநாடு; இராசதானி கோசம்பிநகர்; சூரியோதய காலத்திற் பிறந்ததுபற்றி இவனுக்கு இப்பெயர் அமைந்தது; தேவியர் வாசவதத்தை முதலிய நால்வர்; தன்னிகரில்லா தவனே தொடர்நிலைச் செய்யுட்குத் தலைவனாக இருத்தல் வேண் டுமென்று ஆன்றோர் கூறியதற்கேற்பக் கல்விமுதலிய சிறப்பியல் புகள் பலவற்றாலும் ஒப்பற்றுவிளங்கியவன் இவன்; அரசர்க் கரசனென்றும், ஏகச்செங்கோலினனென்றும் இவன் வழங்கப் படுவான்; இவனுடைய தாய்மரபு தந்தைமரபு இரண்டும் மிகப் புகழ் பெற்றவை; தந்தையின் குலம் குருகுலம்; தாயின் குலம் ஏயர் குலம்; இவன் இந்த இரண்டு குலத்திற்கும் உரிமை பூண்டு விளங்கினன்; ஏயர்குடிக்கும் சேதிநாட்டிற்கும் உரியவர் இவன் தாய்மரபினர்; வத்த நாட்டிற்கும் குருகுலத்திற்கும் உரியவர் இவன் தந்தை மரபினர்; இயற்கை யழகிலும் செயற்கையழ கிலும் சிறந்தவன்; மிக்க இளமைப்பருவத்திலேயே பலவகைக் கலைகளையும் பழம்பிறப்பிற் செய்த தவத்தால் முற்றக் கற்றுத் தேர்ந்தோன்; விற்படை முதலியவற்றிலும், யானையேற்றம் முதலியவற்றிலும், யாழ்வித்தையிலும் வல்லுநன்; விற்படை முதலிய வித்தைகளைக் கற்பித்தலிலும் சிறந்தவன்; இது பற் றியே ஆசான், தேசிகனென்னும் சிறப்புப் பெயர்களுக்கு உரிய னாக இவன் விளங்கினனென்றும், வித்தைவிநோதனென்று சிறப்பித் துப் பாராட்டுதற்கு உரியனாகவிருந்தானென்றும் தெரிகின்றன;

செல்வத்துட் செல்வமாகிய கேள்விச்செல்வம் இவன்பால் அமைந்திருந்தது ; இவன் யானையை அடக்கும் ஆற்றலுடையானென்றும், யானையிலக்கணத்தை நன்கறிந்தவனென்றும், யானைப்பேச்சில் வல்லவனென்றும் கருதப்படுகிறான் ; பிரச்சோதனனுடைய பட்டத்துயானையாகிய நளகிரி யென்பது மதவெறிகொண்டு திரிந்து ஒருவருக்கும் அடங்காமல் உஞ்சேனை நகரத்தைப் பாழ்படுத்தியபொழுது அவன் வேண்டுகோட்கிரங்கிச் சிறையினின்றும் சென்று அதனை மிக எளிதில் அடக்கியது பற்றியே அவனாலும் மற்றையோராலும் மிக மதிக்கப்பட்டு விளங்கினான் ; அதனாலேதான் பிரச்சோதனன் உஞ்சேனை நகரிற் குஞ்சரச்சேரியிலுள்ள மாளிகையை இவனுக்கு இருப்பிடமாய் அமைத்தனன் ; இவனுடைய யாழின் பெயர் கோடபதி என்பது ; எக்காலத்தும் அது தன் தன்மை திரியாதது ; இந்திரனாற் பிரமசுந்தர முனிவருக்கும், பின்பு அவரால் இவனுக்கும் அது கொடுக்கப்பட்டது ; அதன்பால் இவனுக்கு மிக்க அன்பு உண்டு ; யாழிற்குரிய மரங்களினியல்பையும் நரம்புகளின் இலக்கணங்களையும் இவன் நன்கு அறிந்தவன் ; அதிவிசித்திரமான கண்ணி கட்டுதலிலும், வாழைக்குருத்தில் நகத்தினாற் பொய்கை முதலிய பலவகையான சித்திரங்கள் பொறித்தல் முதலியவற்றிலும் வல்லவனாக இருந்தான் ; தன்னைச் சுமந்துவந்த பிடி இறக்குந்தருணத்தில் நற்கதியடையுமாறு பஞ்சமந்திரத்தை அதன்காதில் ஓதினமையாலும், பிறவற்றாலும் இவன் மந்திரவித்தையிலும் வல்லவனென்று தெரிகிறது ; ஒவ்வொன்றையும் ஆராய்ந்தே தெளிபவன் இவன் ; இடவகன், உருமண்ணுவா, யூகி, வயந்தகனென்னும் நான்கு முக்கிய மந்திரிகளும் வேறு பலமந்திரிகளும் இவனுக்கு உண்டு ; அவர்கள் இவனுக்காகச்செய்த உதவிகள் மிகப்பல ; இந்நால்வரும் இவனுடைய தோழர்களாகவும் விளங்கினார்கள் ; அவர்களையன்றி இசைச்சன் முதலிய அன்புடைய தோழர்கள் பலர் இவனுக்கு இருந்தார்கள் ; அறப்போரினும் மறப்போரினும் போராற்றலுடையவன் ; குறித்த இலக்கை ஊடுருவிக்கொண்டு அப்பாலுள்ளவற்றையும் துளைத்துருவும்படி எய்ய வல்ல இராமன் ஓரி என்பவர்களைப்போல அம்புகளை எய்யும் வீரனுள் வீரனாக இவன் விளங்கியதுபற்றி வல்வில்லியென்றும் பாராட்டப்படுவான் ; [illegible] சிறந்தவன்.

**உதயையோடை** :—இவள் பதுமாபதியின் நற்றாய்; சிவமதியின் சகோதரி; காசியரசன் மனைவி.

**உருமண்ணுவா** :—பலவகைப் பெருமையும் வாய்ந்த உயர்குடியிற் பிறந்தவன்; உதயணனுடைய மந்திரிகள் நால்வருள்ளும் அவன் உயிர்த்தோழர்களுள்ளும் ஒருவன்; வயந்தகனுடன் சேர்ந்தே பெரும்பாலும் வழங்கப்படுவான்; யூகிக்கு அடுத்த படியென்னும் பெருமைவாய்ந்தவன்; சேனைகளைப் போரில் நடத்துவதில் மிக்க ஆற்றலுள்ளவன்; எந்தச் சமயத்திலும் மனநடுக்கங் கொள்ளாதவன்; மிக்க புகழினன்; நட்பு, ஊக்கம், வீரம், பகைவர்க்கு அஞ்சாமை, காலம், இடம் முதலியவற்றை நன்கு ஆராய்ந்தே ஒவ்வொன்றையுஞ்செய்யத் துணிதல், நன்றியறிவு முதலியவை இவன்பாலுள்ள விசேடகுணங்கள்; வாசவதத்தையை வவ்விக் கொண்டுவந்த உதயணனை மிக்க உபசாரத்துடன் வரவேற்று அழைத்துச் சென்று சயந்திநகரில் அவளை அவனுக்கு மணஞ்செய்வித்து வேண்டியவற்றைக் குறிப்பறிந்தளித்து அவனுக்கு யாதொரு கவலையுமில்லாதபடி பாதுகாத்து மகிழ்வித்து வந்தோன்; அவளைப் பிரிந்து வருந்திய அவனுக்கு அடிசில்* உடை முதலியவற்றைக் கொடுக்கும்படி தோழர்களால் நியமிக்கப்பெற்ற உண்மையன்பினன்; இராசகிரிய நகரத்தில் உதயணன் மறைந்திருந்தபொழுது தாமும் மறைந்து அவனைப் பாதுகாத்துவந்தவர்களில் இவனுமொருவன்; உதயணனுடைய வாழ்வைக்கருதித் தன்னுடைய உயிர்க்குச் சிறிதும் இரங்காமற் போரில் அவனுக்கு முன்சென்று பகைவராற் சிறைப்படுத்தப்பட்டோன்; கோசம்பி நகரத்தைப் பெற்றபின்பு தன் பிரிவாற்றாமல் வருந்தி, "இருமணமெய்திய வின்பமெல்லா, முருமண்ணுவாவினை யுற்றதற்பின்னை" என உதயணனாற் கூறப்பெற்ற உத்தமசீலன்; மறைந்திருந்த யூகியின் கருத்தைத் தானறிந்துகொள்ளுதற்கும் தன்கருத்தை அவனுக்குத் தெரிவித்தற்குமாகச் சாதகனென்னும் ஓரன்பனை இடையே வைத்துக்கொண்டு சில முக்கியமான காரியங்களை முடித்தவன்; மிகவும் சிக்கலான வழக்கைத் தீர்த்தலில் வல்லவன்; உதயணன் விருப்பத்தின்படி பதுமாபதியின் தோழியாகிய இராசனையென்பவளை மணஞ்செய்து கொண்டோன்; பல பரிவாரங்களினிடையே உதயணன் தன்கையினால் அலங்கரித்து அளித்த வென்றிமோதிரமும் சேனாபதிப்பட்டமும்

பெற்றதன்றி, சயந்தி, இலாவாணகமென்னும் பெரிய நகரங்கள் முதலியவற்றையும் பல ஊர்களையும் சதுரங்கப்படைகளையும் பெற்றவன்; தவஞ்செய்து வந்த தன் தந்தைக்கு யாதொரு துன்பமும் நேராதபடி பாதுகாத்து ஒழுகியவன்; இவனுடைய புதல்வன் பூதியென்பான்.

எலிச்செவி:—தருசகனோடு பகைமைகொண்ட அரசர்களுள் ஒருவன்.

ஏயர்குலம் (ஹேஹயர்குலம்):— மிருகாவதியின் தந்தைகுலம்.

ஐராபதம்:—சிங்கச்சுவணம் என்னும் பொன் பிறத்தற்கிடமான ஒருமலை.

ஐராபதி:—பதுமாபதியின் செவிலித்தாயின்மகள்; அவள் உயிர்த்தோழி; கூனிய உருவமுடைமைபற்றிக் கூனியெனவும் வழங்கப்படுவள்; இராசகிரியநகரத்தில் காமன்கோட்டத்தயலில் பதுமாபதியைக்கண்டு மயங்கிய உதயணனுக்கு அவள் வரலாறுகளைச் சொல்லி அவனுக்கும் அவளுக்கும் இடையே நின்று இருவர் கருத்தையும் முற்றுவித்தவள்; கூர்த்த மதியினள்; பந்தடித்த வில் மிக வல்லவள்; இப்பெயர் அயிராவதி யெனவும் வழங்கும்.

கடகன்:—உதயணன் தம்பி; பிங்கலகடகர் என்பதைப் பார்க்க.

கபாலப்பள்ளி:—உஞ்சை நகரின் புறத்தேயுள்ள காளவனத்திலுள்ளதோர் ஆச்சிரமம்.

கருப்பாசம்:—ஒரு காட்டாறு.

கலிங்கசேனை:—கோசம்பிநகரிலுள்ள தலைக்கோற்பட்டம் பெற்ற 2500 கணிகைமார்களுள் கற்புடையவள்; மதனமஞ்சிகையின் தாய்.

கலிங்கத்தரசன்:—யூகியுடன் இவன் போர்செய்தபொழுது யானைக் கொம்பால் அவன் மார்பைக் குத்தியவன்.

காகதண்டகன்:—இராசகிரிய நகரின் புறத்ததாகிய ஒரு சோலையி லிருந்த பெரியவன்; தோற்றப்பொலிவுள்ளவன்; உதயணனது கவலையை மாற்றியவன்.

காசியரசன்:—இப்பெயரினர் இருவர்; (1) பதுமாபதியின் தந்தை; உதயையோடை என்பவளுடைய கணவன்; மிக்க சேனையை யுடையவன்; (2) நீலகேசியென்பவளுடைய தந்தை.

காஞ்சனமாலை:—வாசவதத்தையின் உயிர்ப்பாங்கி; பேரழகினள்; இனியமொழியினள்; தலைவியின் குறிப்பறிந்து நடப்பவள்; தலைவிக்கு மனக்கலக்கம் நேரும்போதெல்லாம் தக்க பரிகார மொழிகளை மெல்லக்கூறித் தேற்றியவள்; அவளுடைய இன்பகாலத்தும் துன்பகாலத்தும் பிரியாதவள் பந்து

விளையாட்டில் மிக்க பயிற்சி யுள்ளவள்; இவள் பெயர் காஞ்சனை, காஞ்சனமாலை யெனவும் வழங்கும்.

காந்தாரகன் :—பாஞ்சாலராசனுடைய பெரும்படைத் தலைவர்களுள் ஒருவன்.

காந்தாரநாடு :— இதில் இரத்தினபுரமென்று ஒரு நகரமுண்டு. சிறந்த குதிரைகள் பிறக்குமிடங்களுள் ஒன்று.

காம்போசம் :—சிறந்த குதிரைகள் பிறக்கும் தேயத்துள் ஒன்று.

காமன் கோட்டம் :—மன்மதனுடைய கோயில்; இராசகிரிய நகரத்தின் புறத்தேயுள்ள சோலையொன்றில் இருந்தது.

காளக்கடவுள் :—(1) மகாகாளேசுவரரென்னும் சிவலிங்கப்பெருமான்; (2) காள முனிவரென்ற ஒரு முனிவர்.

காளசமணன் :—ஐவகைச் சமயத்தாரைவென்று சாங்கிய சமயத்தைத் தாபித்தவன்.

காளமயிடன் :— ஆருணியரசனுடைய ஒற்றன்.

காளவனம் :— இப்பெயருடைய வனம் இரண்டு; (1) உஞ்சை நகரின் புறத்தேயுள்ளது; இது மகாகாளவனமென்று வேறு நூல்களிற் கூறப்படும்; (2) உதயணன்பால் அன்புடைய இலாமயன் இருந்த வனம்.

கும்பன் :—ஆருணியரசனுக்குக் கண்மணிபோன்றவனும் திண்ணிய அறிவையுடையவனுமாகிய ஒரு வீரன்; பாஞ்சாலராசன் இறந்த பின்பு கோசம்பி நகரத்தே கொல்லப்பட்டான்.

குருகுலம் :—சைன நூல்களிற் கூறப்படும் ஐவகைக்குலத்துள் ஒன்று.

கேகயத்தரசன் :—இவன்பெயர் அச்சுவப் பெருமகனென்பது.

கோசம்பி (கௌசாம்பி நகரம்) :— ஆதியிற் குசாம்பனென்னும் அரசனால் உண்டாக்கப்பட்டதென்பர்; வத்தவநாட்டின் தலைநகர்; யமுனையாற்றையுடையது; உதயணனது இராசதானி; இங்கே அரசுபுரிந்த உதயணன் சிறைப்பட்டு உஞ்சைநகர்க்குச் சென்ற பொழுது பகைவனாகிய பாஞ்சால தேசத்தரசனால் இது கைக்கொள்ளப்பட்டது; அப்பால் அவனைக்கொன்ற உதயணனால் ஆளப்பட்டது; இந்நகரிற் சிறந்த விழாவொன்று நடந்து வந்தது.

கோசலத்தரசன் :—இவனது இயற்பெயர் தெரியவில்லை; இவன் பிரச்சோதனனுடைய முதல் மனைவியின் சகோதரி கணவன்; ஒரு பொழுது பாஞ்சாலவேந்தன் படையெடுத்துவந்து இவனை வென்று வாசவதத்தையையும் அவள் ஆயத்தாரையும் கவர்ந்து சென்று தன் தேவிமார்களுக்குப் பணிப்பெண்களாக நியமித்தனன்; அவனைவென்ற உதயணன் அம்மகளிரைத் தன் தேவி

யர்க்குப் பங்கிட்டுக்கொடுத்துவிட்டு இவன்மகள் வாசவதத்தை (மானனீகை) யென்பவளை மணஞ்செய்துகொண்டனன்.

கோசலவளநாடு :—மிகவும் தூய்மையுள்ள நாடு.

கோசிகன் :—கோசம்பி நகரத்திருந்த ஒரு நிமித்திகன்; சாங்கியத் தாயைக் காப்பாற்ற நினைந்த உதயணன் வினவியபொழுது அவளுடைய வருங்காலச் செய்தியை நன்கு கூறியவன்.

கோடபதி :—உதயணனுடைய யாழ்; யாழ்வகையிற் பேரியாழின் பாற்படும்; பிரமசுந்தரரென்னும் முனிவரால் உதயணனுக்கு அளிக்கப் பெற்றது; தெய்வத்தன்மை வாய்ந்தது; அவன் இதனைக் கற்பிக்கும்பொழுதுதான் வாசவதத்தையின் அன்பைப்பெற்றான்.

கோபாலகன் :— பிரச்சோதனன் பட்டத்தேவிமாருள் ஒருத்தியின் புதல்வன்; வாசவதத்தையின் சகோதரன் அல்லன்; உதயணனுடைய விரோதிகளாகிய இருபதின்மரைவென்றவன்.

கோமுகன் :—இப்பெயருடையாரிருவர்; (1) இடவகனுடையமகன்; (2) உதயணனுக்குப் பதுமாபதியின்பாற் றோன்றியவன்.

கௌசாம்பி :—கோசம்பியைப் பார்க்க.

சகுனி கௌசிகன் :— ஆருணியரசனுடைய வீரன்.

சங்கமன்னர் :—தருசகனோடு போர்செய்தற்கு வந்த எலிச்செவியரசன் முதலியோர்.

சங்கரவரசன் :—தருசகனுடன் போர்செய்தற்கு வந்த அரசர்களுள் ஒருவன்.

சண்பைநகர் :—அங்கநாட்டிலுள்ள பெரிய நகரம்; மிக்க வளமுள்ளது; விசயவரனென்பவனாற் பாதுகாக்கப்பட்டுவந்தது; இந்த நகரத்தில் மித்திரகாமனென்னும் வணிகர்பெருமான் வீட்டில் யூகியும், வாசவதத்தை, காஞ்சனமாலை, சாங்கியத்தாயென்னும் மூவரும் வேற்றுவடிவங் கொண்டு தங்கியிருந்தனர்.

சத்தியகாயன் :—தருசகன் மந்திரிகளுள் ஒருவன்; ஆருணியரசனோடு போர்செய்தற்கு உதயணன் புறப்பட்ட காலத்தில் அவனுக்குத் துணையாகத் தருசகனால் அனுப்பப்பட்ட வீரன்; அப்போரில் இவன் இறந்ததுபற்றி இவன் மக்களுக்கு உதயணன் சீவிதங்கள் அளித்தனன்.

சத்தியூதி :— தருசகனுடைய நண்பன்.

சதானிகன் :—குருகுலத்திற்பிறந்த அரசன்; உதயணன் தந்தை.

சயந்தி :—உதயணனுடைய ஆட்சிக்குட்பட்டதொரு பெரியநகரம்; இதனை உருமண்ணுவா பாதுகாத்துவந்தனன்; உதயணனுக்

கும் வாசவதத்தைக்கும் இந்நகரத்திலேதான் விவாகம் நடந்தது; மருதநிலவளத்தாற் சிறந்தது; இதன் பக்கத்தே மிக அழகியதான மலையொன்றுண்டு; இதுவும் வேறு சில இடங்களும் உருமண்ணுவாவுக்கு உதயணனாற் சீவிதமாக அளிக்கப்பட்டன.

**சவரர் புளிஞர்** :—வேட்டுவர் வகையைச் சார்ந்தவர்.

**சாங்கியத்தாய்**:—இவளது இயற்பெயர் தெரியவில்லை; கோசம்பிநகரத்திற் பார்ப்பன குலத்திற்பிறந்த இவளை மணந்த கணவன் இளமையில் நீங்கியதுபற்றி இவளுக்கு ஒழுக்கத்தவறு ஒருபொழுது உண்டாயிற்று; அது தெரிந்த அதிகாரிகளுடைய கட்டளையால் யமுனையாற்றில் இவளை வீழ்த்திவிடுவதற்குச் சிலர் கொண்டு செல்வதைக்கண்ட உதயணன் இரங்கி விடுவித்துத் தீர்த்தயாத்திரை செய்யும்படி அனுப்பினன்; அப்பால் இவள் கங்கையாடி இமயமலையிற்சென்று இரண்டு வருடம் அங்கே தங்கி ஆண்டுள்ள பெரியோரால் சமய விகற்பங்களையறிந்து கன்னியாகுமரியில் நீராடுவதற்கு அங்கிருந்து புறப்பட்டு உஞ்சைநகருக்கு வந்தபொழுது, இவளுடைய கல்வி, அறிவு முதலியவற்றையறிந்த பிரச்சோதனன் தன் பட்டத்துத்தேவியாகிய ஸ்ரீமதிக்கு நீதிகள் முதலியவற்றைச் சொல்லும்படி இவளை நியமித்தனன்; இவள் அதனைச் செய்துவருகையில் ஒரு பிராயத்தினளாகவிருந்த வாசவதத்தை இவளிடத்து அன்பு வைத்ததை யறிந்த பட்டத்தேவி அவளுக்குச் செவிலித்தாயாயிருக்கும்படி வேண்ட இவள் அங்ஙனமே இருந்தனள்; சாங்கியசமயத்தை மேற்கொண்டமையாலும் வாசவதத்தையின் செவிலித்தாயாக இருந்தமையாலும் சாங்கியத்தாயென்று இவள் வழங்கப்படுவாள்; வாசவதத்தையினிடமும் உதயணனிடமும் இவளுக்கு மிக்க அன்புண்டு; வாசவதத்தையையும் உதயணனையும் அவனைச் சார்ந்தவர்களையும் காப்பாற்றுவதற்கு அவ்வப்பொழுது தன்வருத்தத்தைப் பாராட்டாமல் இவள் செய்துவந்த முயற்சிகள் மிகப்பல; தாயைக்காட்டிலும் அன்பு வைத்து உதயணன் இவளை ஆதரித்து வந்தான்; தாயெனவும் செவிலியெனவும் சாங்கியமுதுமகளெனவும் வழங்கப்படுவள்.

**சாங்கியமுனி** :—பல மாணாக்கர்களுடன் தீர்த்தயாத்திரை செய்த ஒரு பண்டிதன்; சாங்கியத்தாய்க்குப் பல சமயக் கொள்கைகளை அறிவுறுத்தி அவளை நல்வழிப்படுத்தியவன்.

**சாண்டியன்** :—காந்தாரநாட்டு இரத்தினபுரத்திலிருந்த ஓர் அந்தணன்; இது படைத்துக்கோட்பெயர்; அந்தண வடிவமுற்று மாணகனென்னும் பெயர்கொண்டு இராசகிரியத்திலிருந்த பொழுது உதயணன் இப்பெயரையுடையவன்மகனென்று தன்னைக் கூறிக்கொண்டனன்.

**சாதகன்** :—இவனுடைய ஊர் கோசம்பிநகரம்; சாதியாற் குயவன்; உதயணன் சிறைப்பட்டபொழுது அது பொறாமல் வேறு வடிவங்கொண்டு தானும் உடன்சென்று உஞ்சைநகரின் பக்கத்திலுள்ளதோரூரில் ஒரு வீட்டிலிருந்து உதயணனுக்கு அனுகூலங்களைச் செய்தனன்; மறைந்திருந்த யூகிக்கு உயிர்நட்பாளனாக இருந்தவன்; இராசவிசுவாசத்திற் சிறந்தவன்; யூகிக்கும் உருமண்ணுவாவுக்கும் இடையேநின்று பிறரறியாமல் ஒருவர் கூறுவனவற்றை மற்றொருவரிடஞ்சொல்லிக் காரியங்களை நிறைவேற்றியவன்; ஆருணியைக் கொன்று வெற்றியடைந்த பின்பு உதயணனால் இலாவாண நகரத்தில் பெருங்குயமென்னும் பட்டத்தையும் சீவிதமாக இரண்டூர்களையும் பெற்றான்.

**சாயன்** :—ஆருணி யரசனுடைய படைத்தலைவர்களுள் ஒருவன்.

**சாலங்காயன்** :— பிரச்சோதனனுடைய பதினாறுபிர மந்திரிகளுள் முதல் மந்திரி; யாராலும் தணிக்கமுடியாத அரசன் கோபம் இவனுடைய சொற்களால் தணியும்; பேரமைச்சனென்றும் வழங்கப்படுவான்; அவனது கட்டளைப்படி மாயயானையைக்காட்டி உதயணனை வஞ்சித்துப் பிடித்துக்கொணர்ந்து உஞ்சைநகரிற் சிறைசெய்வித்தவன்; தருக்கநூல் முதலியவற்றில் தேர்ச்சியையுடையவன்; வாசவதத்தையை உதயணன் பிடிமீதேற்றிச்சென்றானென்பது கேட்டுக் கடுஞ்சினங்கொண்ட பிரச்சோதனனை நோக்கிச் சில நியாயங்களைக்கூறிச் சமாதானப்படுத்தினன்; பிரச்சோதனனுடைய விருப்பத்தின்படி யூகியோடு நூல்களில் வாதஞ்செய்து தோல்வியுற்றவன்; தன் தங்கை ஆப்பியை யென்பவளை அரசன் வேண்டுகோளால் யூகிக்கு மணஞ்செய்வித்தவன்.

**சாலி** :—இடபகன்மனைவி; ஒருநாட்டின் பெயராகவும் உள்ளது.

**சிங்கச்சுவணம்** :—ஒருவகை உயர்ந்த பொன்.

**சித்திராங்கதன்** :—ஏலிச்செவியரசன் தம்பி; தருசகனுக்குப் பகைவன்; மகதநாட்டில் நடந்தபோரிற் பிடித்து உதயணனாற் சிறையில் வைக்கப்பட்டுச் சிலநாள் சென்றபின் தருசகனால் விடுவிக்கப்பட்டவன்.

சிந்து :—இப்பெயருள்ள நதிகள் இரண்டு; ஒன்று இமயத்திலும் மற்றொன்று மேருவிலும் தோன்றும்.

சிவமதி :—தருசகன் தாய்; உதயையோடையின் சகோதரி; அவள் மகளாகிய பதுமாபதியை அன்புடன் வளர்த்தவள்.

சிவேதன் :—பிரச்சோதனன் மந்திரிகளுள் ஒருவன்; நளகிரி யென்னும் யானை வெறிகொண்டு நகரையழித்தபொழுது பிரச்சோதனன் கட்டளைப்படியே சென்று உதயணனை இரந்து அழைத்துவந்து அவனை அடக்குவித்து அவனுக்கும் அரசனுக்கும் பழக்கஞ் செய்வித்தவன்; அவன் குமாரர்களுக்கும் வாசவதத்தைக்கும் உரிய கல்விகளைக் கற்பிக்கும்படி அரசனது அனுமதியாற் சென்று சொல்லி உதயணனை இணங்குவித்தவன்; உதயணனுக்குரிய பணிகளையெல்லாம் பின்னர் அன்புடன் செய்துவந்தவன்; ஐராபதமென்னுமலையிற் பிறந்த பொன்னின் நாணயங்களிற் பதினாறாயிரம் நன்கொடையாக உதயணனால் இவன் பெற்றான்.

சின்னச்சோலை :—ஒருமலை; இதிலிருந்து உதயணன் சங்கேதமான ஒரு பண்ணைப்பாட அவன் வீரரெல்லோரும் வந்து கூடினர்.

சுமித்திரர் :—ஒரு முனிவர்; நீலவேகனுக்கு அவன் கண்ட கனவின் பயனைத் தெரிவித்தவர். [மிருகாபதிக்கும் தந்தை.

சேடகர் :—அரசாட்சியைத் துறந்த ஒரு முனிவர்; விக்கிரனுக்கும்

சேதிநாடு :—மிருகாவதியின் தந்தைக்குரிய நாடு; இந்நாடு யூகிக்கு உதயணனாற் சீவிதமாகப் பின்பு அளிக்கப்பட்டது.

சேனாபதிமகள் :—வாசவதத்தையின் உயிர்த்தோழி.

சோதமன் :—சௌதர்மேந்திரன்; சௌதர்மமென்பது கற்பலோகம் பதினாறனுள் முதலாவது; இந்த இந்திரன், பத்திராபதியின் வேண்டுகோளால் உதயணனுக்கு மகனாகச்சென்று பிறக்கும்படி சோதவனென்னும் முனிவனுக்குக் கட்டளையிட்டனன்.

சோதவன் :—ஒரு முனிவன்; இவன் சௌதர்மேந்திரனுடைய கட்டளையால் நரவாணனாக வந்து உதயணனுக்குப் பிறந்தவன்.

தண்டாரணியம் :—தண்டகாரணியம்.

தத்தை :—பிரச்சோதனன் மகளாகிய வாசவதத்தை.

தருசகன் :—மகததேயத்து அரசன்; இவனது இராசதானி இராசகிரியமென்பது; இவன் பதுமாபதியின் தமையன்; ஆருணியை வெல்லுவதற்கு இவனது நட்பைப்பெற எண்ணிய உருமண்ணுவா முதலிய மந்திரிகளுடன் உதயணன் மாணகனென்னும்

அந்தணப் பிரமசாரி வடிவங்கொண்டு அந்நகர்ப்புறச்சோலையிற் சிலகாலம் மறைந்திருந்தனன்; இவன் தந்தையாற் புதைத்து வைக்கப்பட்ட வைப்புத் திரவியங்கள் உதயணனால் எடுத்துக் கொடுக்கப்பட்டன; சில நீரூற்றுக்களும் அவனால் இவனுக்குக் காட்டப்பட்டன; பதுமாபதியைக் கேகய அரசனுக்குக்கொடுத்தற்கு இவன் எண்ணினனென்பதையறிந்து போர்செய்தற்கு வந்த அரசர் எழுவரையும் மந்திரிகளுடன் சென்று உதயணன் வென்றானென்பதுபற்றி அவனுக்குப் பதுமாபதியை மணஞ் செய்வித்தான்; தனக்கு உதயணன் செய்த உதவியை நினைந்து அவனுக்கு உதவியாகத் தன் மந்திரிகளையும் சதுரங்கசேனைகளையும் அனுப்பி வெற்றியுண்டாகும்படி செய்தான்; எலிச்செவியரசனாற் சிறையில் வைக்கப்பட்டிருந்த உருமண்ணுவாவை விடுவித்து உதயணன்பால் அனுப்பினன்; உதயணனுக்கு இவனிடத்தில் மிக்க அன்புண்டு; இவன் தந்தையும் உதயணன் தந்தையும் மிக்க நட்புடையோர்; இவன்பெயர் மகதமன்னன், தரிசகன், தருசகுமாரனெனவும் வழங்கும். [வர்.

தருமச்சுருதி :—உதயணனுக்குச் சினதருமங்களை உபதேசித்த முனி

தருமதத்தன் :—தருசகனுடைய மந்திரிகளுள் ஒருவன்; ஆருணியோடு போர் செய்யச் சென்றபொழுது உதயணனுக்கு உதவியாக அனுப்பப்பட்டு மூற்படையில் நின்று பொருத வீரன்; நெய்த்தோர்ப்பட்டிகையும் பத்தூரும் உதயணனாற் பெற்றவன்.

தருமவீரர் :—சித்திபெற்ற சாரணர்களின் தலைவர்; இவருடைய உபதேசமொழிகளைக் கேட்ட விலங்குகளும் பறவைகளும் தத்தஞ் செயல்களை மறந்து அடங்கி நின்றன.

தவதி சயந்தம் :—ஓரிடத்தின் பெயர்.

தவந்தகன் :—வயந்தகனுடைய மகன்.

தனமித்திரன் :—சேடகராசன் புதல்வர்களுள் மூத்தோன்.

தார்காரி :—தருசகன் மந்திரிகளுள் ஒருவன்; உதயணன் ஆருணியோடு போர்செய்தற்குச் சென்ற காலத்தில் உதவியாக இருந் [தவன்.

திருநகர் :—வேசாலியென்னும் அரசனுடைய நகர்.

திலகசேனை :—பாரதகனுடைய தங்கை; யூகியின் மனைவி.

துர்க்கையின் கோட்டம் :—துர்க்காதேவியின் கோயில்.

துல்லியன் :—பலநாற் பயிற்சியையுடைய ஓரரசன்.

துவராபதி :—பழையதொரு நகரம்; இதனரசன் சுந்தரன்.

திலோத்தமை : நாடகத்தெய்வ மகளிர் ஒன்பதின்மருள் ஒருத்தி.

நஞ்சுகன் :—குபேரனுக்குத் தொண்டு செய்யும் ஓர் இயக்கன்.

நரவாணதத்தன் :—உதயணனுக்குப் பிரச்சோதனன் மகளாகிய வாசவதத்தையினிடம் பிறந்த புத்திரன்; குபேரனது அருளினால் உதித்தவனாதலின் இப்பெயர்பெற்றான் (நரவாகனன் - குபேரன்); வித்தியாதரசக்கரவர்த்தியாகப் பின்பு ஆயினன்.

நருமதை :—உஞ்சைநகரிலுள்ள 50,000 நாடகக்கணிகையருள் தலைக்கோற்பட்டம்பெற்ற ஒருத்தியின் மகள்; பிரச்சோதனனால் நன்கு மதிக்கப்பெற்றவள்; வாசவதத்தைபாலுள்ள அன்பின் மிகுதியால் தனக்குண்டான வேறுபாடும் இரவில் அரற்றுதலும் இவளாலுண்டாயினவென்று பிறர் எண்ணும்படி வயந்தகனைக் கொண்டு உதயணனால் வருவித்து மீட்டும் அனுப்பப்பட்டவள்.

நருமதையாறு :-விந்தமலையிலுண்டாவது; பத்திரையென்னுந் தெய்வமகள் குபேரனாற் சாபம்பெற்றது இதன் கரையிலேதான்.

நளகிரி :—பிரச்சோதனனது பட்டத்து யானை; மதவெறிகொண்டு உஞ்சைநகரை அழித்துக்கலக்கிய இதன் கோபத்தை அடக்கியமையாலேதான் உதயணன் சிறையினின்றும் விடப்பெற்றான்.

நாகதத்தை :—கந்தருவபுரத்து அரசனாகிய நீலவேகன் மனைவி.

நீலகேசி :—காசியரசன்மகள்; மந்தரவரசன் மனைவி; விரிசிகையின் தாய்.

நீலவேகன் :—கந்தருவபுரத்து அரசன்.

பத்திராபதி :—ஒரு பெண்யானை; பிரச்சோதனனுக்குரியது; ஊர்ந்து செல்லும்படி உதயணனுக்குப் பிரச்சோதனனாற் கொடுக்கப்பட்டது; நீர் விழவில் இதன்மேலேதான் வாசவதத்தையை ஏற்றிக்கொண்டு உதயணன் தன்நகர் சென்றனன்; செல்லுகையில் காலகூடமென்னும் வியாதியால் இடையே இது வீழ்ந்து இறந்துவிட்டது; கோசம்பி நகரத்தை அடைந்து வாழ்கையில் உதயணன் இதன் ஞாபகார்த்தமாக இது வீழ்ந்த இடத்திலும் கோசம்பியிலும் கோயில்கள் சமைத்து அவற்றில் இதன்வடிவங்களையமைப்பித்து நித்தியபூசை முதலியவற்றை நடத்திவரச் செய்தனன்; இப்பெயர் பத்திராவதியெனவும் வழங்கும்; பத்திராவதியென்னும் தெய்வப் பெண் குபேரன் சாபத்தால் இந்த யானையாய்ப்பிறந்து இறந்த பின்பு பழைய உருவத்தை யடைந்தாளென்று ஒரு வரலாறு காணப்படுகின்றது.

பத்திரை :— ஒரு தெய்வமங்கை; குபேரனுக்குப் பல்வகைப் பணிபுரிந்தொழுகும் எண்பது நாடக மகளிருள் ஒருத்தி.

பதுமகாரிகை :— பிரச்சோதனனுடைய தேவிமார் பதினறுயிரவருள் முதல்வி; வாசவதத்தையின் நற்றாய்.

பதுமாபதி :— தருசக அரசன் தாயின் சகோதரியான உதயையோடையின் மகள்; இவள் தந்தை காசிராசன்; அபிமான புத்திரியாக்த் தருசகன் தாய் வளர்த்துவந்தமையின், இவள் தருசகன் தங்கையென்று கூறப்படுவாள்; இராசகிரியத்தில் நடந்த காமனுடைய விழாவில் வழிபடுவதற்குக் காமன் கோட்டத்திற்குச் சென்றபொழுது மாணகனென்னும் பெயருடன் நின்ற உதயணனுக்கும் இவளுக்கும்நட்புண்டாகிக் காந்தருவமணம் முதலில் நடந்தது; பிறகு அவனைத் தன் கன்னிமாடத்திற்கு ஒருவரும் அறியாதபடி அழைத்துவந்து பலநாள் வைத்திருந்தனள்; பகைவர் தருசகனோடு போர்செய்வதற்கு வந்தபோது உதயணன் புறத்தேயிருந்து வந்தவன்போல வந்து தன்னை இன்னனென்று பலருந் தெரிந்துகொள்ளச் செய்து தோழர்களோடு சேர்ந்து அப்பகைவரை வென்றனன்; அதனால், பதுமாபதி உதயணனுக்கு மணஞ்செய்விக்கப்பட்டு இரண்டாம் பட்டத் தேவியாயினள்; சிறந்த குணத்தினள்; கல்வி கேள்விகளிற் சிறந்தவள்; வாசவதத்தைக்கு அனுகூலத்தையே தேடுபவள்; இவள் பெயர் பதுமை, பதுமாவதியென்வும் வழங்கும்.

பதுமை :— இவள் ஒரு தூதி; உதயணன் வெற்றிபெற்றுக் கௌசாம்பியில் வாசவதத்தையுடன் அரசாளுகையில் அவன் அன்பைப் பெறவேண்டி அவனுக்கும் அவளுக்குமாகப் பலவேலைக்காரர்களுடன் பல அரும்பொருள்களை அனுப்பிய பிரச்சோதனனால் சமாதானமாகப் பேசுதற்கு அவனிடம் அனுப்பப்பட்டவள் இவள்; அங்ஙனமே உதயணனைப் பார்த்தபொழுது பேசித் தன் தலைவன்மீது அவனுக்கிருந்த மனவருத்தத்தைப் போக்கினள்.

பரதகன் :— பிரச்சோதனனுடைய மந்திரிகளுள் ஒருவன்; சாலங்காயனுக்கு அடுத்தபடியென்னும் பெருமை வாய்ந்தவன்; சிறந்த நூற்பொருள்களை அறிந்தவன்.

பரதன் :— ஒரு சக்கரவர்த்தி; உதயணனுடைய குலமுதல்வன்.

பரமசுந்தரி :— பிரமசுந்தரயோகியின் மனைவி; யூகியின் தாய்; கற்பிற் சிறந்தவள். [முறிந்து விழும்படி வேலையெறிந்தவன்.

பவணத்தரசன் :— யூகியின் வலப்பக்கத்துப் பற்களுள் ஒன்று

பவணம் :—நாகலோகம் ; செல்வத்திலும் போகத்திலுஞ் சிறந்தது.
பாகீரதி :—தேவராட்டி வேடம்பூண்ட ஒருத்தி ; உதயணனைச் சேனைகளுடன் பிரச்சோதனன் கௌசாம்பிக்கு அனுப்ப எண்ணியது தெரிந்து, அதனால் தன் சூழுறவு தவறிவிடுமேயென்றெண்ணிய யூகியின் கட்டளையால் தெய்வாவேசங்கொண்டவள் போல் உஞ்சைநகரின் வீதியில் வந்து ஆடிச் சனங்களை அச்சுறுத்தி நீர்விழாச் செய்யும்படி செய்வித்தவள்.
பாஞ்சால தேயம் :—நீர்வளமுடையது ; ஆருணியரசனது நாடு.
பாஞ்சாலராசன் :—ஆருணியரசனென்பதைப் பார்க்க.
பாட்டகம் :—சத்தியூதி யென்பவனுடைய நகரம்.
பாடல் :—பாடலிபுத்திர நகரம்.
பாலகன்:—இப்பெயருடையாரிருவர் ; (1) முனிவர் வேடங்கொண்ட ஒரு சமணன் ; (2) பிரச்சோதனன் புதல்வர்களுள் ஒருவன்.
பாலகுமரன் :—பிரச்சோதனன் புதல்வன் ; உஞ்சைநகரில் உதயணன் நளகிரியை யடக்கியபின்பு தந்தையின் கட்டளைப்படி அவனுக்கு வேண்டியவைகளைக் குறிப்பறிந்து செய்து வந்தவன்.
பிங்கலகடகர் :—உதயணன் தம்பிகள் ; உதயணன் மாயயானையாற் பிடித்துக்கொண்டு போகப்பட்டபொழுது யூகியின் வேண்டுகோளால் தாய்மிருகாவதியையும் கோசம்பி நகரத்தையும் பாதுகாத்தார்கள் ; ஆருணியரசன் அந்நகரைக் கைப்பற்றியபொழுது அவனை வெல்லமாட்டாதவர்களாய்த் தம்முருவத்தை மறைத்துக்கொண்டு பலவீரர்களோடு வேறிடஞ்சென்றனர் ; அப்பால் உதயணன் ஆருணியோடு போர்செய்தற்குச் செல்லும்பொழுது அவனைக் கண்டு பணிந்து பலவாறு புலம்பி உடனிருந்து உதவிசெய்தவர்கள் ; கடகபிங்கலரெனவும் வழங்கப்படுவர்.
பிங்கலசாரமாணி :—உதயணன் வீரர் பதின்மருள் ஒருவன்.
பிரச்சோதனன் :—ஒரு மகா சக்கரவர்த்தி ; வாசவதத்தையின் தந்தை ; இவன் நாடு அவந்தி ; இராசதானி உச்சைனிநகர் ; உதயணனை வஞ்சத்தாற்பிடித்துச் சிறையில்வைக்கும்படி செய்தவன் ; இவன் தேவியர் பதினாறாயிரவருள் வாசவதத்தையைப் பெற்ற நற்றாயாகிய பதுமகாரிகையென்பவள் முதன்மை வாய்ந்தவள் ; இவனுக்குப் பாலகன், பாலகுமரன், கோபாலகனென்பவர் முதலிய குமாரர்கள் பலர் உண்டு ; மந்திரிகள் பதினாறாயிரவர் ; இவனுக்குள்ள முரசம் பதினாறாயிரம் ; இவன் பிறர்க்குக் கொடுப்பனவும் பிறர் இவனுக்குக் கொடுக்கும் கைய

றைகளும் பதினாறாயிரம்; இவனுக்கு இப்படியே ஒவ்வொன்றும் பதினாறாயிரம் பதினாறாயிரமாகப் பதினாறு பகுதிகளிருந்தன; பெருவண்மையன்; இவன்சொல் மிக்க பொருட்சிறப்பையுடையது; ஆற்றலிலும் வெற்றியிலும் அறிவிலும் நிகரற்றவன்; ஆணையிற்சிறந்தவன்; வீரியவேந்தன், அவந்திவேந்தன், ஏகத்திகிரியிறைவன், வெற்றி வேந்தன், மறமாச்சேனன், உஞ்சையர் பெருமகன், பெருவேந்தன், ஆற்றல்வேந்தனெனவும் இவன் பெயர்கள் வழங்கும்.

பிரமசுந்தரமுனிவர் :—பலபெரிய முனிவர்களுக்குத் தலைவர்; தருமத்தைப் பரிபாலனஞ்செய்வதே இவர் கோட்பாடு; இவர்மனைவி பரமசுந்தரியென்பாள்; இவர் யூகியின் தந்தை; உதயணனுக்கு யானையின் கோபத்தை அடக்கும் வித்தையையும் கோடவதியென்னும் யாழையும் இசைநூலையும் மற்றுமுள்ள பலவித்தைகளையும் அளித்தவர்; யூகியை உதயணன்பால் அடைக்கலமாக ஒப்பித்தவர்.

பிரமசேனன் :—ஆருணியரசனுடைய பெரும்படைத்தலைவர்களுள் [ஒருவன்.

புட்பகம் :—உதயணனுக்குரிய பெருநகரங்களுள் ஒன்று; சேனைகளுடனிருந்து இதனைப் பாதுகாத்துவந்த இடவகனுக்கு உதயணனால் விருத்தியாகக் கொடுக்கப்பெற்றது.

புண்டரம் :—இது வாசவதத்தையும் சாங்கியத்தாயும் யூகியும் வேற்றுவடிவங்கொண்டு தங்கிய இடங்களுள் ஒன்று.

புன்றுளகம் :—இலாவாண நகரத்திற்கும் மகதத்திற்கும் இடையே [யுள்ளநாடு.

பூதி :—உருமண்ணுவாவின் புதல்வன்.

பூரணகுண்டலன் :—இவன் ஆருணியரசனுடைய அமைச்சன்; உதயணனோடு போர்செய்தற்கு அவன்புறப்பட்டபோது நிமித்தம் நன்றாக இல்லாமையால், அவனுக்குப் புத்தி கூறியவன்.

போதனபுரம் :—மிலேச்சனென்னும் அரசனுடைய நகரம்.

மகதநாடு :—தருசகனுடைய நாடு; இதன் இராசதானி இராசகிரியம்; இதிற் பிறந்த இரத்தினவேலைக்காரர் பெரும்புகழினர்.

மதனமஞ்சிகை :—கலிங்கசேனையென்பவளுடைய புதல்வி; நரவாணதத்தன் மனைவி; பேரழகுடையவள்; மானசவேகனென்னும் வித்தியாதரனால் விரும்பி எடுத்துச் செல்லப்பட்டுத் தன் கணவனால் மீட்கப் பெற்றவள்.

மதுகாம்பீரவனம் :—கோசம்பிநகரத்தின் புறத்ததாகிய ஒரு பூஞ் [சோலை.

மந்தரம் :—ஆருணியரசன் பட்டத்துயானை; ஊகிரியை ஒத்தது.

மந்தரவரசன் :—வெள்ளிமலையிலுள்ள வித்தியாதர அரசருள் ஒருவன் ; இவன் வனத்தில்வந்து தவஞ்செய்கையில், உதயணனால் இளமையில் மாலைசூட்டப்பெற்ற தன்மகளுக்குப் பருவம் வந்தபொழுது அவளை அவனுக்கு மணஞ் செய்வித்துவிட்டு மனைவியைத் துறந்து தவஞ்செய்தற்குச் சென்றான்.

மருபூதி :—யூகியின் புதல்வன்.

மல்லன் :—தருசகனோடு போர்செய்யவந்த பகையரசர் எழுவர்களுள் [ஒருவன்.

மாகளவனம் :—உஞ்சைநகரின் புறத்தேயுள்ள ஒரு காடு ; இதில் ஒரு துர்க்கை கோயிலுண்டு ; அது யூகிக்கும் அவனுடைய நண்பர்களுக்கும் தனியேயிருந்து ஆலோசனை செய்தற்குரிய இடமாக இருந்தது ; இது மகாகாளவனமெனவும் வழங்கும்.

மாணகன் :—இஃது உதயணன் சிலநிமித்தம்பற்றித் தன்னைப் பிறரறிந்துகொள்ளாதபடி இராசகிரியத்திலிருந்தபொழுதுகொண்ட [வேறுபெயர்.

மாராட்டம் :—மகாராஷ்டிர தேசம்.

மானசவேகன் :—வெள்ளிமலையோரத்திலுள்ள 110-வித்தியாதர அரசர்களுள் ஒருவன் ; மதனமஞ்சிகையை விரும்பி எடுத்துச் சென்று நரவாணதத்தனால் வெல்லப்பட்டவன்.

மானனீகை :—இது கோசலத்தரசன் மகளதுவேறுபெயர்; இவளது இயற்பெயர் வாசவதத்தை யென்பது ; இவள் தாய் வசுந்தரி யென்பாள் ; கோசலதேசத்தரசனைவென்று அவனது அந்தப்புரத்திலிருந்து பாஞ்சாலராசன் கவர்ந்து சென்ற மங்கையர்களுள் இவள் ஒருத்தி ; பின்பு அவன் பட்டத்தேவியின் பணிப்பெண்ணாக இருந்து அவனைக்கொன்ற உதயணனாற் கொண்டுவந்த மகளிரோடு இவளும் கொண்டுவரப்பட்டு வாசவதத்தையின் பணிப்பெண்ணாக இருந்து தன் பந்தாட்டத்தைக் கண்டு மோகித்த உதயணனுக்குப் பின்பு மனைவியாயினள்.

மித்திரகாமன் :—ஒருவணிகன் ; பெருஞ்செல்வமுடையவன் ; வேறு வேடங்கொண்ட வாசவதத்தை முதலிய நால்வரும் இவன் வீட்டிலேதான் சிலகாலம் மறைந்திருந்தனர்.

மிருகாபதி (மிருகாவதி) :—உதயணன் நற்றாய் ; இவளுடைய சகோதரன் விக்கிரன் ; இவள் தந்தை ஏயர்குலத்திற்குத் தலைவன்.

மிலேச்ச மன்னர் :—ஒருவகை வீரர்களின் தலைவர்.

மிலேச்சர் :—ஒருவகை வீரர்.

மிலேச்சன் :—போதன புரத்து அரசன் ; தருசகனோடு பகைகொண்டு போர்செய்ய வந்த அரசர்களுள் ஒருவன்.

முனையூர் :—இடவகனுக்கு உதயணன் கொடுத்த ஒரு நாட்டின் தலை நகரம்.

மேன்கை :—தெய்வமகளிர் எண்மருள் ஒருத்தி; குபேர னுக்குப் பணி புரிபவள்.

யமுனை :—யமுனாநதி ; இது கோசம்பி நகரத்தின் பக்கத்தே ஓடுவது.

யவனம் :—தச்சு வினையில் மேம்பட்ட ஒரு தேயம்; இதற் கென்றே தனியாக ஒரு பாஷை இருந்ததென்றும் அதில் உதயணனும் கோசலதேசத்தரசன் மகள் வாசவதத்தையும் நல்ல பயிற்சியுள்ளவர்களென்றும் தங்கள் கருத்தைப் பிறரறி யாதபடி ஒருவர்க்கொருவர் அதில் தெரிவித்துக்கொண்டன ரென்றும் சொல்வர்.

யாப்பியாயினி :—ஆப்பியாயினியைப் பார்க்க. [கொள்ளப்பட்டவள்.

யாப்பியை :—சாலங்காயனுடைய தங்கை ; யூகியால் மணஞ்செய்து

யூகி :—உதயணனுடைய மந்திரிகளுள் முதல்வன் ; இவனுடைய குணவிசேடங்கள் எழுதியடங்குவனவல்ல; வில்வித்தை முத லிய எல்லாக்கலைகளையும் உதயணனுடன் கற்றுப் பயின்று உடன் வளர்ந்தவன் ; அவனுக்கு உயிர்த்தோழன் ; சிறைத் துன்பத்தினின்றும் அவன் நீங்கியது முதலியவற்றிற்கும் இழந்த அரசாட்சியை மீட்டும் பெற்றதற்கும் பிறநலத்திற் கும் காரணம் இவனுடைய பெருமுயற்சியே; பிரச்சோதனன் உதயணனை வஞ்சகச்செய்கையாற் பிடிப்பித்து வருவித்துச் சிறைப்படுத்தினனென்ற செய்தியை வயந்தகன் கூறக்கேட்ட வுடன், " என் தலைவனைக் கபடமாகப் பிடிப்பித்து வருவித்தவன் மகள் வாசவதத்தையை அவன்அறியாதவண்ணம் கொண்டுவரும் படி செய்வேன் " என்பது முதலிய சபதஞ்செய்துவிட்டுத் தான் இறந்துபோனதாக ஒரு செய்தியை எங்கும் பாவச்செய்து பிற ரறியாமல் உஞ்சைநகரம் சென்று தான் கருதியதை நிறைவேற் றியவன் ; பிரச்சோதனனால் பிற்காலத்தில் வருவித்து நன்கு உபசரிக்கப்பெற்றவன் ; பெருவிறற்றோழன், இடனறி சூழ்ச்சி யூகி, அரும்பெறற் சூழ்ச்சியவன், ஒழுக்கியறிரியா யூகியெனப் பாராட்டிக் கூறப்படுவான் ; உதயணன் முதலிற்பெற்ற சேதி நாடு அவனால் இவனுக்குச் சீவிதமாகக் கொடுக்கப்பட்டது ; ஊகி, யூகந்தராயணன், யூகந்தராயனெனவும் இவன் பெயர் வழங்கும்.

வசுந்தரி :—கோசலநாட்டரசன் தேவி ; மானனீகையென்னும் வேறு பெயர் கொண்ட வாசவதத்தையின் தாய்.

வஞ்சகாந்தை :—இஃது ஓராறு.

வத்தவநாடு (வத்ஸதேசம்) :—இதன் தலைநகர் கௌசாம்பி ; இதற்குத் தலைவன் உதயணன் ; வச்சமெனவும், வத்தமெனவும் வழங்கும்.

வயந்தகன் :—உதயணனுடைய மந்திரிகளுள் ஒருவன் ; அவன் உயிர்த்தோழன் ; அந்தணன் ; அவனுடைய குறிப்பறிந்து நடந்து மதிப்புப்பெற்றவன் ; பகைவன் விடுத்த மாயயானையின் உள்ளேயிருந்தும் புறத்தேவந்தும் போர்செய்தற்கு வந்த வீரரோடு போர்செய்ததன்றி அவர்கள் கையில் அகப்பட்ட உதயணன் கொடுத்த ஓலையைக் கொண்டுபோய் யூகியிடங்கொடுத்து மேலே நிகழ்த்தவேண்டியவற்றை விரைவில் நிகழ்த்தும்படி அவனை ஊக்கியவன் ; உதயணனோடு இடைவிடாமலிருந்து உதவியவன்; அவன் உஞ்சைநகரஞ் சென்றபின் வேறு வேடம் பூண்டு அந்நகர்சென்று பிரச்சோதனனுடைய குமாரர்களுடன் சேர்ந்து வில்வித்தை முதலியவற்றைக் கற்கும் மாணாக்கன்போலிருந்து அங்கே நடப்பனவற்றை அறிந்தறிந்து அவ்வப்பொழுது யூகிக்குச் சொல்லியனுப்பியவன் ; உதயணனுக்குப் பணிபுரிந்து ஒழுகும்படி பாலகுமாரனால் நியமிக்கப்பெற்றவன் ; யூகி சொல்லியனுப்புவனவற்றையும் அவ்வப்பொழுது உதயணனுக்குத் தெரிவித்து நிறைவேற்றியவன் ; பிடி வீழ்ந்த பின்பு காட்டில் வாசவதத்தையோடு உதயணன் தனித்துத் தங்கிய போது வேடர்களால் அவனுக்குண்டான துன்பத்தைப் போக்கிச் சயந்திநகரை அடையச் செய்தவன் ; வானசாஸ்திரத்திலும் வல்லவன் ; நல்ல பயனைத்தரும் நகரங்கள் பதினொன்றை இவனுக்கு விருத்தியாகக் கொடுத்ததன்றி உதயணன் நாடோறும் ஆயிரம்பொன்னுங் கொடுப்பானாகி எப்போதும் தன் உடனிருக்கும்படியும் செய்தான்.

வராகன் :—பிரச்சோதனனுடைய அந்தப்புர ஏவலாளனாகிய ஒரு வில்வீரன்; வாசவதத்தையைப் பிடிமீதேற்றி உதயணன் சென்றபொழுது சிலதூரம் தொடர்ந்துசென்று அதனை முதலில் பிரச்சோதனனுக்கு அறிவித்தவன்.

வருடகாரன் :—தருசகனுடைய முதல்மந்திரி ; மிகவும் கபடமான ஆலோசனையையும் தறுகண்மையையும் உடையவன் ; பாஞ்சாலராசனை வெல்லுதற்கு இவன்செய்த ஆலோசனைகளும் செயல்களும் பல ; அந்த அரசனைக் கொன்ற பின்பு உதயணன் மணமுவந்து இவனைத் தழுவித் தானணிந்த கலன்களையும் ஏறிய யானையையும் இவனுக்கு அளித்தனன்.

வருத்தமானன் :—புண்டர நகரத்திலிருந்த ஒருபகாரி.

வாசவதத்தை :—இவள் உதயணனுடைய தேவியர் நால்வருள் முதல்வி; பட்டத்தேவி; பதுமகாரிகையின் புதல்வி; இந்திரனருளால் உதித்தவளாதலின் இவள் இப்பெயர் பெற்றாள்; அழகிலும் குணத்திலும் சிறந்தவள்; பெண்பாலார்க்குரிய கலைகளில் மிகப்பயிற்சியுள்ளவள்; அவற்றுள் இசையையும் யாழையும் உதயணன்பாற் கற்றுத்தேர்ந்தவள்; மாலை தொடுத்தல் முதலிய கைத்தொழிலிற் சிறந்தவள்; சிற்பவேலையில் இவளுக்குப் பயிற்சியுண்டு; தந்தை முதலியவர்பால் அன்புமிக்கவள்; மற்ற மகளிர் பலருள்ளும் பிரச்சோதனனுக்கு இவள்பால் அன்பு அதிகம்; தன்பாலுள்ள காதலால் உதயணன் இராசகாரியத்தை மறந்துவிட்டானென்று பிறர்சொல்லத் தெரிந்தமையால், இவள் தான் இறந்து போய்விட்டதாகப் பெயர்பண்ணிச் சிலகாலம் சேவிலித்தாய் முதலியவர்களோடு வேற்றுருவங்கொண்டு மறைந்திருந்தனள்; அவனுடைய ஆக்கத்தைக்கருதி இவளடைந்த துன்பங்கள் பல; உதயணனுக்கு இவள்பால் அன்பு அதிகம்; இவ்விருவரும் ஒருவரை யொருவர் அடைந்தது தவப்பயனென்பர்; இவளுக்குத் தோழியர் பலரிருப்பினும் காஞ்சனமாலையிடத்தேதான் மிகுந்த அன்புண்டு; மிக்க தூய்மையை யுடையவளாயிருந்தது பற்றியே சோதவனென்னும் முனிவரன் இவளுடைய கருப்பத்திற்றங்கி நரவாணதத்தனைப் பிறந்து வித்தியாதர சக்கரவர்த்தியாக ஆயினனென்பர்.

வாரணவாசி :—அடவியென்னும் அரசனது நகரம்; காசியுமாம்.

விக்கிரன் :—இவன் உதயணனுடைய அம்மான்; மிருகாபதியின் தமையன்; ஏயர்குலத்திற் பிறந்தவன்; தன் அரசாட்சியை உதயணனிடம் ஒப்பித்துவிட்டுத் தான் தவஞ்செய்யச் சென்றவன்.

விச்சுவலேகை :—இவள் வாசவதத்தையின் தோழியர்களுள் ஒருத்தி; குறுகிய வடிவமுடையவள்; பந்தாட்டத்திற் சிறந்தவள்.

விசயவரன் :—இவன் உக்கிரகுலத்திற்பிறந்த அரசன்; இவனுடைய இராசதானி அங்கநாட்டிலுள்ள சண்பைநகர்.

விசயார்த்தம் :—வித்தியாதரர்களுக்கு உறைவிடமாகிய ஒரு வெள்ளிமலை.

விஞ்சையம்பெருமலை :—வெள்ளிமலை; இது வித்தியாதரர்களிருத்தற்குரிய இடம்; இதிலுள்ள வெள்ளி மிகச்சிறந்தது. விந்தியமலையும் இப்பெயரால் வழங்கப்படும்.

விண்ணாத்தராயன் :—இவன் பிரச்சோதனனால் அழைக்கப்பட்ட யூகி, உஞ்சைநகர் சென்றபொழுது அவனுக்குப் பாதுகாப்பாக உதயணனால் அனுப்பப்பட்டு அவனுடன் சென்றவன்.

விதையம் (விதேஹதேசம்) :—இது விமானத்திற்சென்ற வாசவதத்தையாற் பார்க்கப்பட்ட தேயங்களுள் ஒன்று.

விந்தம் :—விந்தியமலை; இதிலுள்ள காடு புகழ்பெற்றது; இதிலுள்ள யானைகள் மிக்க வீரியமுடையவைகள்; இது விஞ்சமெனவும் வழங்கும்.

விபுலம் :—மிருகாபதியின் தந்தை தவஞ்செய்துகொண்டிருந்த ஒரு மலை; உதயணன் பிறந்தது இம்மலைச்சாரலிலேதான்.

வியாதன் :—வியாஸமுனிவர்.

விரிசிகன் :—தருசகனுடைய பகையரசருள் முதல்வன்.

விரிசிகை :—இவள் ஓரிராசரிஷியின் மகள்; தவஞ்செய்யவந்த அவருடன் இவளும்வந்து ஒருவனத்திலிருந்தபொழுது இளமைப் பருவத்தில் உதயணனால் மாலை சூட்டப்பெற்றுப் பின்பு அவனால் மணஞ்செய்து கொள்ளப்பட்டவள்; கற்பிற்சிறந்தவள்.

வேகவதி :—வித்தியாதர அரசனாகிய மானசவேகன் தங்கை; மதனமஞ்சிகையின் மனத்தை வேறுபடுத்தும்படி அவனால் அனுப்பப்பட்ட இவள் நரவாணதத்தனுடைய மேம்பாட்டைக் கேட்டு அவனிடம் விருப்பங்கொண்டு மதனமஞ்சிகையின் வடிவத்தையடைந்து அவனோடு இன்புற்றாள்.

வேசாலி :—தருசகனுடைய பகையரசருள் ஒருவன்.

வைசாலி :—விக்கிரனுடைய இராசதானி; உதயணனுக்கு ஒப்பிக்கப்பட்டது.

வையாக்கிரம் :—உதயணன் யூகிக்குக் கொடுத்த தேர்.

ஸ்ரீதரர் :—விபுலமலையின் சாரலில் தவஞ்செய்து கொண்டிருந்த முனிவர்.

ஸுவ்ருதர் :—முக்காலவுணர்ச்சியுள்ள ஒரு முனிவர்; மிருகாபதியைச் சரபப்புள் எடுத்துச்சென்று விபுலகிரியில் வைத்தது முதல் உதயணன் வைசாலியில் அரசாட்சி செய்ததுவரையிலுள்ள செய்திகளையும், சதானிகனுடைய பிற்காலச்செய்திகளையும் அவனுக்குத் தெரிவித்தவர்.

---

உ

# கதைச் சுருக்கம்



## (1.—உஞ்சைக் காண்டம்.)

வத்தவ நாட்டிலுள்ள கௌசாம்பி நகரத்திலே குருகுலத்திற் பிறந்த சதானிகனென்னும் அரசன் சேதிநாட்டிலுள்ள வைசாலி நகரத்தரசனும் ஏயர்குலத்தவனுமாகிய சேடகனென்பவனுடைய புதல்வி மிருகாபதி என்பவளை மணஞ்செய்து இல்லறம் நடத்திவருகையில் மிருகாபதி கருவுற்றாள். கருவுற்ற பத்தாவது மாதத்தில் நிலாமுற்றத்திலே சிவந்த ஆடையைப் போர்த்துக்கொண்டு அவள் ஒரு மஞ்சத்தில் துயிலுகையில் ஒரு சிம்புட்பறவை தசைத்தொகுதியென்று நினைத்து அவளை மஞ்சத்தோடு எடுத்துச்சென்று விபுலகிரியின் பக்கத்தே வைத்தது. அப்பொழுது மிருகாபதி விழித்துக் கொள்ளவே பிராணவதம் பண்ணாத பறவையாதலின் அது பறந்து போய்விட்டது. பின்பு சூரியோதய காலத்தில் எல்லாக் கோள்களும் நல்ல நிலையில் அமைந்திருப்ப மிருகாபதிக்கு ஒரு குமாரன் பிறந்தான். அங்கே தவம் செய்துகொண்டிருந்த மிருகாபதியின் தந்தையின் பாதுகாப்பில் தாயும் மகனும் இருந்து வந்தனர்.

உதயகாலத்திற் பிறந்தவனாதலின் அப்புதல்வன் உதயணன் என்னும் பெயர் வைக்கப்பெற்றான். அவன் தன் தாயைப்பெற்ற பாட்டன் அருளால் வளர்ந்து பிரமசுந்தரரென்னும் முனிவருடைய குமாரனாகிய யூகியென்பவனோடு பலகலைகளை அம்முனிவர்பாற் கற்றுத் தேர்ந்தான்; அவர்பாற் பெற்ற கோடபதி என்னும் யாழை வாசிப்பதில் வல்லவனானான். ஒரு நாள் அவனுடைய யாழிசைக்கு வசமுற்ற ஒரு தெய்வயானை, "யான் உன்னிடமே இருப்பேன்; ஆனால் யான் உண்ணுமுன் நீ உண்பாயாயின் உன்னை நீங்குவேன்" என்று சொல்லவே அதற்கு உடன்பட்டு அவன் அதன் அன்பைப் பெற்றான்.

பின்பு அங்கேவந்த உதயணனுடைய மாமனாகிய விக்கிரனென்பவன் அவனைத் தன் மருகனென்றறிந்து தன் நாட்டிற்கு அழைத்துச் சென்று தன் அரசுரிமையை ஈந்தான். அப்பால் சதானிகன் தன்

குமாரனை அறிந்து தன் அரசுரிமையையும் வழங்கினன். அவ்விரண்டு நாடுகளையும் உதயணன் அரசாட்சி புரிந்துவந்தான்.

ஒருநாள் உதயணன், மறந்து முன் உண்டமையால் அவன்பால் இருந்த தெய்வயானை அவனைப் பிரிந்து நீங்கியது. அதனால் வருத்தமுற்ற அவன் அதனைத் தேடிக்கொண்டு யாழுங்கையுமாகக் காட்டில் தனியே திரிந்தனன்; அக்காலத்தில் திறை கொடுக்கவில்லையென்ற கோபத்தால் உச்சயினி நகரத்து மகா சக்கரவர்த்தியாகிய பிரச்சோதனனென்பவன் உதயணனை அகப்படுத்தும் பொருட்டு ஓர் எந்திர யானையைச் செய்வித்து அதற்குட் பல வீரர்களை மறைந்திருக்கச்செய்து அவ்யானையை விடுத்தான். உதயணன் தெய்வயானையென்று நினைந்து தனியே அதனருகிற்சென்று யாழ் வாசித்தான். அப்பொழுது அதன் உள்ளிருந்த வீரர்கள் வெளியேவந்து உதயணனைச் சூழ்ந்துகொண்டனர். அவர்களோடு அவன் போர்செய்து, பிடியுண்டு உச்சயினி நகரத்திற் சிறைவைக்கப்பட்டான்.

அச்செய்தியைக் கேட்ட உதயணனுடைய முதன் மந்திரியாகிய யூகி, "என் தலைவனை வஞ்ச யானையைக் காட்டிப் பிடிப்பித்த பகைவன் மகளை அவனறியாமற் பிடித்துவரச் செய்வேன்" என்று சபதங் கூறித் தான் இறந்து போய்விட்டதாக ஒரு பொய்யுரையை எங்கும் பரவச் செய்து பலவீரர்களுடன் வேற்று வடிவங்கொண்டு உச்சயினிக்குப்போய் மறைந்து அங்கே நிகழ்வனவற்றை அப்பொழுதப்பொழுது அறிந்துகொண்டிருந்தான். பிறகு சக்கரவர்த்தியின் பட்டத்து யானையாகிய நளகிரியை மதவெறிகொண்டு உச்சயினி நகரத்தை அழிக்கும்படி செய்தான். அதன் செயலை யறிந்து மனங் கலங்கிய பிரச்சோதனன் அதனை அடக்கும் வழிகளை ஆராய்ந்து உதயணனே அதனை வசப்படுத்தும் வன்மை யுடையவனெனத் தெளிந்து அவனைச் சிறையினின்றும் விடுவித்துத் தன்கருத்தைத் தெரிவித்தான்.

உதயணன் தன் யாழிசையால் நளகிரியை யடக்கி அதன்மேல் ஊர்ந்து சென்று பிரச்சோதனன்முன் நின்றான். நகரமாந்தர் யாவரும் உதயணனைப் புகழ்ந்து பாராட்டினர். அக்காலத்தில் பிரச்சோதனனுடைய குமாரியாகிய வாசவதத்தையென்பவள், 'இத்தகைய மகா வீரனைப்பார்க்கவேண்டும்' என்ற எண்ணத்துடன் மேல் மாடத்தில் நின்று உதயணனை நோக்கினாள். அவனும் அவளை நோக்கினான். ஊழின் வசத்தால் இருவரும் ஒருவரை யொருவர் விரும்பிக் காதல் பூண்டனர்.

பின்பு அரசனுடைய வேண்டுகோளின்படி உதயணன் அவனுடைய புதல்வர்களுக்கு வில்வித்தை முதலியவற்றையும் புதல்வி வாசவதத்தைக்கு யாழ்வித்தையையும் கற்பித்து அவனால் நன்கு மதிக்கப்பெற்றான். பிரச்சோதனன் உதயணனைத் தக்க படைவலியுடன் கௌசாம்பி நகரத்துக்கு அனுப்ப எண்ணியிருந்தான்.

இடையே உச்சயினியில் யூகியின் ஏவலால் பாகீரதியென்பவள் தெய்வாவேசமுற்றவளைப்போல நடித்து, "முன்பு நீர்விழாச் செய்யாமையினால் யானையைக்கொண்டு ஊரை அழிப்பித்தவள் யானே; இனியேனும் அதனை மறவாதீர்கள்" என்று உச்சயினியிலுள்ளாரை நீர்விழாச் செய்யும்படி தூண்டினாள். அதற்காக நகரத்தார் புறத்தே சென்றிருந்தபொழுது யூகியின் ஏவலாளர் நகரில் தீ மூட்டினர். அதனால் நீர்விழாச்செய்தற்கு வந்திருந்த நகர மாந்தருள் கலக்கம் நேர்ந்தது. அப்பொழுது பிரச்சோதனன் வாசவதத்தையைப் பாதுகாக்குமாறு அவளை உதயணனிடம் ஒப்பிக்கச்செய்தான். வயந்தகனென்னும் தோழனால் யூகியின் கருத்தையறிந்த உதயணன் வாசவதத்தையை அவள் தோழி காஞ்சனமாலை யென்பவளுடன் பத்திராபதி யென்னும் பெண்யானையின்மேல் ஏற்றிக்கொண்டு பிரச்சோதனனுடைய நாட்டைக் கடந்து சென்றான். வழியிற் பாலை நிலத்தில் உள்ள வேட்டுவர்கள் சூழ்ந்துகொள்ளவே, தன் சேனையுடன் அங்கேவந்த இடபகனென்னும் தோழனால் ஆதரிக்கப்பெற்றுத் தனது பெரிய நகர்களுள் ஒன்றாகிய சயந்தியை அடைந்தான்.

(2.—இலாவாணகாண்டம்.)

உதயணன் வாசவதத்தையோடு சயந்தி நகரத்தை அடைந்த காலத்தில் அந்நகரமாந்தர்கள் அவர்களைப் பலவகையாக உபசரித்து வரவேற்றனர். அந்நகரத்தில் அவ்விருவர்களுக்கும் மிகவும் சிறப்பாக மணம் நிறைவேறியது. சில காலத்துக்குப் பின்னர் அவன் ஜினதேவன் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தை வலம்வந்து அக்கடவுளை வழிபட்டான். அப்பால் நகரமாந்தர் கண்டுமகிழ வாசவதத்தையுடன் நகரத்தை வலங்கொண்டு இரவும் பகலும் அவளைப் பாராட்டிக்கொண்டு அந்நகரத்தில் இருந்தான்.

உதயணன் இங்ஙனம் இருப்ப, யூகி உச்சயினி முதலிய இடங்களிற் செய்விக்கவேண்டியவற்றைச் செய்வித்து அறியவேண்டுவனவற்றை அறிந்து விரைவாகச் செல்லும் ஓர் எந்திரத்

தேரிலேறி இடபகனிருந்த புட்பக நகரத்திற்கு வந்தான். அங்கே உதயணன் காமபரவசனாகி யிருத்தலை இடவகனால் அறிந்து அரசியலை மேற்கொள்ளும்படி உதயணனைச் செய்வித்தற்பொருட்டுச் சில காரியங்களை மறைந்திருந்து செய்யக்கருதினான்; தான் இறந்து போனதாக நடித்து அஃது உண்மையென்றே அயலாரை நம்பச் செய்தான்.

வாசவதத்தையின் செவிலித்தாயாகிய சாங்கியத்தாய் என்பவள் உதயணனையும் வாசவதத்தையையும் முறையே சார்ந்து அளவளாவி, அவன் முக்கிய மந்திரியாகிய உருமண்ணுவாவுடன் வயந்தகனென்னும் மற்றொரு மந்திரியைக்கண்டு யூகி கூறிய மந்தணச் செய்தியைச் சொன்னாள். பிறகு வயந்தகன் எழுதித் தந்த உதயணனது படத்தைக் கொண்டு சென்று உதயணனுக்குக் காட்டவும் அதில் உள்ள ஒரு சிற்பக் குறிப்பால் யூகி இறந்தானென்றறிந்து அவன் மூர்ச்சித்தான். அப்பால் ஒருவகையாகத் தெளிந்து யூகியின் அருஞ்செயல்கள் பலவற்றைச் சொல்லிப் புலம்பினான்; அதுகண்ட தோழர்கள் அவனைத் தேற்றினர். உருமண்ணுவா உதயணனது துன்பத்தை நீக்குதற்கும் ஒரு முனிவர்பாற் குறிகேட்டற்குமாக இலாவாண நகரின் அயலதாகிய மலைச்சாரற் சோலையில் உண்டாடற்குச் சயந்திநகரத்தாருடன் அழைத்துச் செல்லுதற்கு உதயணனை உடன்படச்செய்வித்தான்.

சயந்தி நகரத்திலுள்ள ஆடவரும் மகளிரும் அரசன் கட்டளைப் படியே பலவகையான நுகர்பொருள்களுடன் இலாவாண நகரத்தின் அயலிலுள்ள மலைச்சாரலிற் சென்று உண்டாடினர். அங்கே சென்ற உதயணன் முனிவர் ஒருவரைத் தரிசித்து யூகி உயிருடனிருப்பதையும் அவனையடைதல் கூடுமென்பதையும் அவர் கூறக் கேட்டுத் துன்பம் நீங்கினான். அப்பால் உதயணனும் வாசவதத்தையும் அங்கே உண்டாடி மகிழ்ந்தனர்.

பின்பு உதயணன் ஓர் ஆச்சிரமத்தை யடைந்து வயந்தகனுடன் இருந்தான். அப்போது ஒரு முனிவருடைய மகளாகிய விரிசிகை யென்பவள் பலவகை மலர்களைப் பறித்து வந்து, "யானும் என் பாவையும் அணிந்து கொள்ளும்படி இவற்றை மாலையாகத் தொடுத்துத் தருக" என்று வேண்டினாள். உதயணன் அங்ஙனமே செய்தளித்தவுடன் அவள் அம்மாலையை அணிந்துகொள்ள அறியாமல் வருந்துவதையறிந்து அழைத்துத் தன் மடிமீதுவைத்து அவளுக்கு அதனைச் சூட்டிவிடுத்தான்.

உண்முத லுலகிற் கொருமீக் கூறிய
தெய்வ வாழி கைவலத் தருட்டலும்
பொய்யா தாத லுறுபொரு ளென்மரும்
இவையும் பிறவு மியைவன கூறி
நகரத் தாளரொடு நாடுபுகழ்ந் தேத்த
நிகரில் செல்வத்து நிதியந் தழீஇ
யாப்புடை மகன்வயிற் காப்புடன் புரிகென
விதியறி மகளிரொடு மதிபல நவின்ற
மருந்துவகுப் பாளரைப் புரந்துறப் பணித்துத்
தளர்வி லூக்கந் தலைத்தலை சிறப்ப
வளரு மாதோ வைகறொறும் பொலிந்தென்.

கூ—நரவாணதத்தன் பிறந்தது முற்றிற்று.

---

## எ—யூகி பிரச்சோதனனைக் கண்டு வந்தது.

(பிரச்சோதனன் நரவாணதத்தன் பிறந்ததை அறிதல்)

பொலிந்த செல்வமொடு புகழ்மீக் கூரி
மலிந்த திருவின் வத்தவர் பெருங்குடி
உண்மகி ழுவகை யூக்க மிமிழப்
பண்மகிழ் பேரியாழ் பயிற்றிய கேள்வி
உலைவில் வென்றி யுதயண குமரற்கு
நலமிகு புதல்வ னன்னாட் பிறந்த
உகவை மாற்ற முஞ்சைப்பெருநகர்ப்
பகையடு வேந்தற்குப் பணிந்தன னுரைப்பத்
தன்மைக் கேற்ற தலைப்பே ரணிகலம்
புன்மை தீர முன்னிலை நல்கிப்
பழன மணிந்த பதினா றாயிரம்
கழனி நன்னகர் கலக்க மில்லன
மன்ன னருளி மன்னரு மறவரும்
இன்னே வருகென் றியமர மறைகென
முறைசெறி முதியற்குப் பெறுவன நல்கி
விரைசெல லிவுளி வேந்த னேவ

(முரசறைதல்)

ஓடை யணிந்த வொண்பொ னெற்றிக்
கோடுடை வேழம் பாடுபெறப் பண்ணி
எருத்தின் மீமிசைத் திருத்தக விரீஇத்
துகின்மடி யணைமிசைத் துளக்க மின்றிப்
பாற்படு வென்றி நாற்புடை மருங்கினும்
கண்டோர் விழையுந் தண்டாக் கோலமொடு
நீத்தியாற் றன்ன நெடுங்கண் வீதியுட்
போத்தர வமைந்து புகுவழி யெல்லாம்
கனைபொற் கடிப்பிற் காண்டக வோச்சிப்
புனைபொற் பூந்தார்ப் புரவலன் காக்கும்
கன்னி மூதெயி னன்னகர் கேட்ப
மதிமரு ணெடுங்குடை மறமாச் சேனற்குப்
பதினா றாயிரம் பட்ட மகளிருள்
முதற்பெருந் தேவி திருநா ளீன்ற
மதுக்கமழ் கோதை வாசவ தத்தை
வடதிசை மீனிற் கற்புமீக் கூறி
வடுவில் செய்தொழில் வத்தவர் பெருமகன்
குறிப்பறிந் தொழுகிக் கோடாக் குணத்தொடு
பொறிப்பூண் மார்பிற் புதல்வற் பயந்தனள்
கோமகற் பெற்று..............................
சேய்முதல் வந்த சிறப்பின ராகி
.....................யக்கூடம் பூண்டபின்
வருபரி சார மணிநீர்ப் பேரியாற்
றிருகரை மருங்கினு மிங்கில மேத்தச்
சீர்மையொடு பொருந்திச் சிறப்பு முந்துறீஇ
அறிவி னமர்வார் நெறிமையிற் றிரியா
இருபான் மாக்களு மொருபாற் றிருந்த
வார்திரை நெடுங்கட லுலப்பி னுளொடு
வாழ்கநங் கோமான் வையக மெல்லாம்
பகையும் பிணியும் பசியு நீங்கித்
தகையுஞ் செல்வமுந் தாம்படு கென்ன
மிகைபல புகழ்ந்து தொகைஇ யாற்றிய
இன்ப மொழியவுன் பன்முறை யறைந்தபிற்

(நகரை அலங்கரித்தல்)

...................யொண்புக ழுவந்தன ரேத்தி
வரைநிரைத் தன்ன மாடந் தோறும்
திரைநிரைத் தன்ன படாகையுங் கொடியும்
காட்சிக் காகா மாட்சிய வாகி
அணிபெற வுயரிப் பணிவிலர் மறல
இந்திர வுலக மிழுக்குபு வீழ்ந்து
வந்திருந் தன்றெனக் கண்டவ ரேத்த
வேனல வேந்தன் விழுப்பெருங் கோயிலுட்
பன்னூ றாயிரம் பண்முர சார்ப்ப

(பிரச்சோதனன் விழாக்கொண்டாடல்)

நன்னீர் விரவிய செந்நிறச் சுண்ணம்
குலநல மகளிரொடு கோமக ளாடி
ஐந்நூற் றிரட்டி யருங்கடை தோறும்
பசும்பொன் மாசையும்...................
பிடிப்புவிலை யறியாப் பெருங்கல முட்படக்
கொடித்தேர் முற்றத்துக் குறையுடை யோர்கட்
கீகென வருளி யெண்டிசை மருங்கினும்
ஆய்படை வேந்தற் கரும்பெறற் றிருமகள்
வாசவ தத்தை தீதில் சிறப்பொடு
புத்திரற் பெற்றனள் பொலிவு முந்துறீஇ
மொய்த்த மாநகர் முறைமுறை வருகென
அதர்கடி தோடுறு மமைதி யாளரைப்
பொறியொற் றோலையொ டறியப் போக்கி
ஆராக் காதலொ டணிபா ராட்டி
நீராட் டயர்ந்து பல்கல னணிந்து
சீரார் செல்வமொடு செவ்வி கொடீஇத்
தெரிமா ணாளர் திறவதிற் சூழ
அரிமா சுமந்த வாசனத் திருந்து

(யூகியைப் பிரச்சோதனன் வருவித்தல்)

பொன்றாப் புகழோன் போர்க்கல் வேண்டி
ஒன்றா ரட்ட யூகியைத் தரீஇ
இன்றியா னெய்தினெ னெனின்...................

பிரச்சோ தனனவ னுரைத்ததன் பின்னர்ப்

(யூகியும் சாலங்காயனும் தர்க்கஞ்செய்தல்)

பாற்பட் டெய்திய பதினா றுயிரம்
தூப்பா லமைச்சர் மேற்பா லறிவிற்
றலைக்கை யாகிய நலத்தகு நாட்டத்து
ஞாலம் புகழுஞ் சாலங் காயன்
ஏற்ற சிறப்பி னியூகி தன்னொடு
மாற்றங் கொடுத்தல் வலித்தன னாகி
முதல்வன் செவ்வி [1] முகமுத னோக்கிச்
சிதைபொரு ளின்றிச் செந்நெறி தழீஇ
உதையத் திவரு மொண்சுடர் போல
எல்லா மாந்தர்க்கு மிருளற விளங்கும்
செல்லா றிதுவெனச் சொல்லுதல் வேண்டிச்
சாலவை நாப்பட் சலத்திற் றீர்ந்த
கேள்வி யாளரை வேறுதெரிந் தமைத்து
வாதம் வேண்டிய சாலங் காயன்
மாற்றம் பகுத்தற் காற்றி னாடி
மேற்கொண் டுரைக்கு மெய்த்துறை மருங்கின்
னூற்பாற் றழீஇய குற்ற மிவையெனக்
கேட்டோர் மனமுணக் கிளந்தவன் கடாவ
மெய்த்தகு நுண்பொருண் மெத்தப் பன்னி
உத்தர வாக்கியம் யூகியு நிறீஇக்
கழிபே ருவகையொடு காவல் வேந்தன்
ஒழிக நாமிவற் காற்றே முரையெனச்
சாலங் காயனைத் தோல்வினை யேற்றி
உரைத்த கிளவிக் கொன்றே போல
விரித்துப்பல குற்றம் விளங்கக் காட்ட

(பிரச்சோதனன் யூகியின் விசேடகுணங்களை வியத்தல்)

ஏற்ற முகத்தி னிறைவனும் விரும்பி
கண்பின் மாட்சியுங் கல்விய தகலமும்
பண்பின் றொழிலும் படைத்தொழின் மாண்பும்
காயு மாந்த ராயினும் யாதும்

---

பி - ம். 1 முகமுகநோக்கிச்.

தீயவை கூறப் படாத திண்மையும்
இவற்கல தில்லை யிவனூற் பெற்ற
அவற்கல தில்லை யாசின் மாட்சியென

(பிரச்சோதனன் யூகிக்குச் சிறப்புச் செய்தல்)

மன்னிசை நிறீஇய நன்ன ராளனொடு
நுண்ணெறி நுழையு நூற்பொரு ளொப்புமைத்
தன்வயின் மக்களை யவன்வயிற் காட்டி
வேண்டற் பால வெறுக்கை நாடி
வேண்டா ரட்டோன் வேண்டா னாயினும்
அற்பிற் பிணித்த வருண்மறுப் பரிதா
நற்பல கொடுத்து நம்பி பிறந்த
திருநாட் டானம் பெருநாட் காலை
ஏற்போர்க் கீக வின்றே போன்மெனக்
கோப்பெருங் கணக்கரைக் குழுவிடை விளங்கக்
கடைப்பிடி நுகும்பினு ளிடைப்பட வெழுதுகென்
றியூகியு முணர வேயின னாகிப்

(யூகிக்கு இருவரை மணம்புரிவித்தல்)

பரதகன் றங்கை பரந்தரி சிந்திய
மதரரி மழைக்கண் மடம்படு காரிகைத்
திலகமா சேனையென் றுலகறி பவளையும்
சாலங் காயற் கிளையோ ளாகிய
நீல வுண்க ணிலவுவிடு கதிர்நுதற்
பாக்கிய மமைந்த பார்ப்பியாப் பியையும்
ஆகிய வறிவி னரும்பொருட் கேள்வி
யூகிக் கீத்துப் பாகுபட லின்றி
யாதே யாயினு மாகவினி யெனக்கென
மாதாங்கு திண்டோண் மகிழ்ந்தன னேக்கி

(பிரச்சோதனன் யூகியைப் பாராட்டல்)

அங்கண் ஞாலத் தரசிய லமைதி
எங்கட் கெல்லா மின்றி யுதயணன்
தன்கட் டங்கிய தகைமை நாடின்
இன்கண் மாண்பி னெடுமொழி யாளா
ஆயிற் றென்றுபல வருளொடும் புணர்ந்து

யூகிக் குரையா வொருங்குட னிழற்றிப்
.............................................
கனவினு நனவினு மின்ப மல்லது
துனைவேற் றடக்கைநம் புனைமுடி வேந்தன்
காணலன் கண்டீர் மாணல மியைந்த
நல்வினை யுடையன் பெரிதெனப் பல்லோர்
இகழ்தல் செல்லார் புகழ்வனர் புகன்று
வாசவ தத்தையும் வத்தவ மன்னனும்
ஏசினன .................................
நவிற்றொறு மினிய ஞானம் போலப்
பயிற்றொறு மினியநின் பண்புடைக் கிழமை
உள்ளுதோ றுள்ளுதோ றுள்ள மின்புறப்

(யூகியை விடுத்தல்)

பிரிவுறு துன்ப மெம்மாட் டெய்த
எரியுறு நெடுவே லேய றிறைவன்
வருக வென்றனன் சென்மதி நீயெனப்
பருகுவனன் போலப் படைப்பெரு வேந்தன்
அவனை யிருப்ப னிவனை யெனவே
கருதல் வேண்டுமெனக் கைவிரல் பற்றி
விடுக்கும் பொழுதி னெடுத்தவ னின்னேர்
உண்டோ வொழுக்கி னென்றுபின் விடுப்ப
அருங்கலம் பிறவு மொருங்கு முந்துறீஇ
வேந்துறை முதுநகர் வியன்மலை யாகப்
போந்துகடன் மண்டும் புண்ணிய நீர்த்துறைப்
பேரியா றென்ன வார்பெருஞ் செல்வமொடு
நன்ப னாட்டகம் பின்பட நீந்தி
வளங்கவி னெய்திய வத்தவ னிருந்த
நலம்பெறு நகரம் புக்கன னினிதென்.

எ—யூகி பிரச்சோதனனைக் கண்டு வந்தது முற்றிற்று.

## அ—மதனமஞ்சிகை வதுவை.

(யூகி உதயணனுக்குக் கூறல்)

நலம்பெறு நகரம் புக்கன னாகி
நிலம்பெறு திருவி னெடுமுடி யண்ணலைக்
கண்டுகண் கூடிக் கழலுறப் பணிந்து
மண்டமர்க் கடந்த மறமாச் சேனன்
உள்ளத் தன்ன வுவகைசெய் தனவும்
வள்ளற் றனமும் வகுத்தனன் கூறி
அவந்தி நாடு மணியுஞ் சேனையும்
இயைந்து மூன்றுமீஇ யிருபாற் குலனும்
தெம்மு னழியாத் தெளிவிடை யாகச்
செம்மையிற் செய்த செறிவுந் திண்மையும்
நம்பிக் கீத்த நன்புகழ் நாடும்
இன்னவை யென்று பன்முறை பயிற்றி

(உதயணன் செயல்)

நாட்டு வாயுளும் [1] காட்டு வாயுளும்
காத்த லின்றிப் பாத்த னன்றெனத்
தாமுடை நாடு நகரமுந் தரீஇ
வாய்முறை வந்த வழக்கியல் வழாமை
எட்டுமிசை யேற்றி யியல்பினின் யாப்புறுத்
தாற்றல் சான்ற வரும்பெறற் சுற்றமொடு
கூற்றமும் விழையக் கோலினி தோச்சிக்
கோட்ட மின்றிக் குடிபுறங் காத்து
வாட்டொழிற் றானை வத்தவர் பெருமகன்
அன்புடைத் தோழரோ டின்புற் றொழுகச்
சிறந்த திருவொடு செல்வம் பெருகப்
பிறந்த நம்பி திறங்கிளந் துரைப்பேன்

(நரவாணதத்தனுடைய இளமைப் பருவம்)

குலக்குவிளக் காகத் தோன்றிக் கோலமொடு
நலத்தகு சிறப்பி னல்லோர் காப்பண
இலக்கணம் பொறித்த வனப்புடை யாக்கையன்

---

பி - ம். 1 கோட்டு.

விசும்பிற் கவாவும் வேட்கைய னாகிப்
பசும்பொற் பல்படை யிலங்கும் கழுத்தினன்
திருவா ளாய தேங்கமழ் மார்பன்
நரவாண தத்த னொடொரு நந்தி
உலம்பொரு மார்பி னுதயண குமரன்
நலம்பெறு தோழர் நால்வரும் பெற்ற
வலம்பெறு சிறப்பின் வனப்பொடு புணர்ந்த
நலம்பெறு கோமுக னும வரிசிகன்
தகைமிகு பூதி தவந்தக னென்னும்
நன்ன ரமைந்த நால்வருஞ் சூழத்
தளர்நடைக் காலத் திளமை யிகந்து
நல்லா சாரமொடு நல்லோர் காட்ட
நற்பொருண் ஞான நவின்றுதுறை போகி
விற்பொரு ணன்னூல் விதியி னுணித்துப்
படைக்கலக் கரணம் பல்வகை பயிற்றிக்
கொடைக்கடம் பூண்ட கொள்கைய னாகிக்

(நரவாணதத்தனது கௌமாரப் பருவம்)

குறைவில் செல்வமொடு குமார காலம்
நிறையுற வுய்த்து நீர்மையின் வழாஅ
ஏமஞ் சான்ற விந்நில வரைப்பிற்
காம னிவனெனக் கண்டோர் காமுறத்
தாளுந் தோளுந் தருக்கி நாளும்
நடவா நின்ற காலை மடனார்ந்

(கன்னிகையர் இயல்பு)

திற்று மந்தி யிற்றெழு பூங்கொடி
புற்புல முதிரக நற்றுற விக்கே
போல்வ ரென்னுஞ் சால்புடை யொழுக்கிற்
கலைதுறை போகிய கணிகா சாரத்துப்
பலதுறை பயின்று பல்லுரைக் கேள்வியொடு
படிவங் குறிக்கும் பாவனை மேற்கொண்

(கலிங்கசேனை)

டடிமையிற் பொலிந்த வகன்பரி யாளத்துத்
தலைக்கோற் சிறப்பி னலத்தகு மகளிர்

ஆயிரத் திரட்டி யைந்நூற் றுவர்களுட்
காசில் சிறப்பிற் கலிங்க சேனையென்
றோசை போகிய வொளியின ளாகிய

(மதனமஞ்சிகை பந்தாடுகையில் பந்து கீழே விழுதல்)

மாசில் கற்பின் மடமொழி மடமகள்
வானோ ருலகி னல்லது மற்றவட்
கீனோ ருலகி னிணைதா னில்லெனக்
கண்டோ ராயினுங் கேட்டோ ராயினும்
தண்டாது புகழுந் தன்மைய ளாகித்
துதைபூங் கோதை சுமத்த லாற்றா
மதர்மா னோக்கின் மாதரஞ் சாயற்
பதரில் பணிமொழிப் பணைத்தோட் சின்னுதல்
மதர்வை நோக்கின் மதனமஞ் சிகைதன்
மலைபுரை மாடத் துயர்நிலை மருங்கின்
அணிச்சா லேகத் தணித்தகு துளையூ
டெறிபந் திழுக்குபு விழுதலி னோக்கிச்

(நரவாணதத்தன் உலாவரல்)

செறிவளைத் தோளி செம்முக மாக
வேகத் தானை வேந்த னொருமகன்
போகுகொடி வீதியிற் புகழ்ந்துபல ரேத்த
அருவரை மருங்கி னருவி போல
இருகவுண் மருங்கினுஞ் சொரிதரு கடாத்ததோர்
இடுமணி யானை யெருத்த மேறிப்
படுமுகின் மீமிசைப் பனிமதி போல
உலாவெனப் போந்தோ னிலாவுறழ் பூந்துகிற்

(நரவாணதத்தன் மதனமஞ்சிகையைக் கண்டு விரும்பல்)

றானைப் படுதலிற் றானே கொண்டிஃ
திட்டோ ளார்கொலென் றெட்டி நோக்கினன்
நிறைமதி வாண்முகத் துறழ்வன போல
நீளரி யொழுகி நிகர்தமக் கில்லா
வாள்புரை தடங்கண் வலைத்தவுள் வாங்கி
நெஞ்சகம் புடைப்ப வெஞ்சின வீரன்
அறியா மையின் மறுகுறு சிந்தையன்.

பந்துவலி யாகப் பையெனப் போகியோர்
அந்தண் காவினு ளசைந்தன னிருந்து

(நரவாணதத்தன் கோமுகனை வினுதல்)

கொய்மலர்ப் படலைக் கோமுகற் கூஉய்க்
கைபுனை வனப்பிற் கணிகையர் சேரியிற்
செய்பந் தீதுடைச் சேயிழை மாதரை
ஐய மின்றி யறிதி யாயின்
மெய்பெற வுரையென மேயினன் வினவக்

(கோமுகன் மதனமஞ்சிகையின் உருவத்தை எழுதுதல்)

கையிற் கொண்டோன் கண்டன னதன்மிசை
ஒற்றிய வொற்றைத் தெற்றெனத் தெரிந்து
நறுவெண் சாந்தம் பூசிய கையாற்
செறிவுறப் பிடித்தலிற் செறிவிர னிரைவடுக்
கிடந்தமை நோக்கி யுடங்குணர் வெய்தி
விரலும் விரலிற் கேற்ற வங்கையும்
அங்கைக் கேற்ற பைந்தொடி முன்கையும்
முன்கைக் கேற்ற நன்கமை தோளும்
தோளிற் கேற்ற வாளொளி முகமும்
[1] மாப்படு வடுவுறழ் மலர்நெடுங் கண்ணும்
துப்பன வாயு முத்தொளி முறுவலும்
ஒழுகுகொடி மூக்கு [2] மெழுதுநுண் புருவமும்
சேடமை செவியுஞ் சில்லிருங் கூந்தலும்
ஒல்குமயி ரொழுக்கு மல்குற் பரப்பும்
மருங்கி னீளமு நிறங்கிளர் சேவடித்
தன்மையு மெல்லா முன்முறை நூலின்
அளந்தனன் போல வளம்பட வெழுதிப்
பாவை யிலக்கணம் பற்றி மற்றதன்
நிறமு நீளமும் பிறவுந் தெரியாச்
செறிதா ளண்ணலைச் செவ்வியின் வணங்கி
இதன்வடி வொப்போ ளிந்நகர் வரைப்பின்
மதன மஞ்சிகை யாகுமென வலித்துப்

---

பு - ம். 1 மாம்படு. 2 மெழுது நன்புருவம்.

(கோழகன் மதனமஞ்சிகை வீடு சென்று பரிசங்காட்டல்)

பந்துகைக் கொண்டு மைந்தன் போகிக்
காழார் வனமுலைக் கணிகையர் சேரித்
தோழ னுள்ளத் தாழ்நனி கலக்கிய
மாதர் மனைவயிற் றாதுவ னாகிப்
பல்காற் சென்று மெல்லெனச் சேர்ந்து
குறிப்புடை வெங்கோய் நெறிப்பட நாடிய
பாசிழை நன்கலம் பரிய மாக
மாசில்பந் தறிவு படமேல் வைத்தாண்
டன்ற தாய்முதற் றோன்றக் காட்டிப்

(பாத்தையர் செயல்)

பட்டது கூறலி னொட்டிய வுவகையள்
வழிபடு தெய்வம் வரந்தரு கின்றென
மொழிவன ளாக முகத்தின் விரும்பித்
தாயுந் தவ்வையுந் தம்மொடு பயின்ற
ஆய்வளை மகளிரு நிகழ்ந்ததை யறிந்து
சீரின மதித்துச் சிற்றின மொரீஇப்
பேரினத் தவரொடு பெருங்கிளை பிரியாத்
தலைக்கோன் மகளிர் தன்மை கூறிக்
கற்கெழு கானவன் கைக்கோ ளுமிழ்ந்த
எற்படு சிறுதீ யெழுச்சியிற் காமம்
பிருமனத் துவகையி னெல்லை விருப்பம்
முறையின் முறையின் முறுக மூட்டிக்
கொடித்தேர்க் கோமான் குறிப்பி னல்லதை
அடித்திசை யருளுதல் யாப்பின் றெமக்கெனப்
படிற்றுரை மகளிர் பரிய மறுப்ப

(கோழகன் கூறல்)

இருங்கண் வையகத் தேந்தலு முரியன்
மருந்தேர் கிளவி மதனமஞ் சிகைதன்
காமரு நோக்கங் காணக் கூடும்
ஏம வைக லியல்வதா மெனினென

(உதயணன் மதனமஞ்சிகைக்குப் பொன் விடுத்தல்)

அன்றுகை யில்லாது சென்ற வுள்ளமொடு

பகன்மதி போலப் பசந்த குமரன்
இகன்மிசை யுள்ளத் தெவ்வங் கேட்டுத்
தலைப்பெருந் தேவியுந் தந்தையுங் கூடிக்
குலப்பெருந் தேவியாக் கோடி விழுநிதி
சிறப்பின்விட் டிருந்து நலத்தகு கிழமைக்
கியாவரு முரியோ ரிவளி னில்லெனக்
காவல் வேந்தன் காணங் காண்டலின்

(நரவாணதத்தன் மணம்)

உறூஉர் போல வுற்ற காதலொடு
மறூஉ மாதர் வதுவை வலித்தபின்
மதிபுரை முகத்தியை மன்னவ னொருமகன்
வதுவைச் செல்வமொடு வான்றோய் வியனகர்
விதியி னெய்தி விழவு முந்துறீஇப்
பதனறிந்து நுகருமாற் பண்புமிகச் செறிந்தென்.

அ—மதனமஞ்சிகை வதுவை முற்றிற்று.

---

## ௯—மதனமஞ்சிகை பிரிவு.

(திருவிழா)

பதனறிந்து நுகரும் பருவத் தொருநாட்
கோல நீண்மதிற் கொடிக்கோ சம்பி
ஞால மெல்லா நயந்துடன் காண
முழவொடு பல்லிய முன்றிற் றதும்ப
விழவொடு பொலிந்த வழகிற் றாகித்
திசைதிசை தோறுந் திருக்கண் கூடிய
வசையறு திருநகர் வந்துடன் றுவன்றிப்
பொன்றா வேட்கைப் புலங்களை நெருக்கி
வென்றா ராயினும் விழையும் விழவணி
காணும் வேட்கையொடு சேணுய ருலகிற்
றேவ கணமும் மேவா விழிதா
விறல்கெழு சிறப்பின் விச்சா தரரும்
இறைகொண் டிழிதர விப்பாற் சேடியின்

(மானசவேகன் வருதல்)

நுணங்குவினை விச்சையொடு நூற்பொரு ளுணித்த
மணங்கமழ் நறுந்தார் மானச வேகனென்
றூற்றல் சான்ற நூற்றொரு பதின்மர்
அரைச ருள்ளு முறைசெல விளங்கிய
மின்னார் மணிமுடி மன்னனு மிழிந்து

(மானசவேகன் கண்டகாட்சி)

பத்திப் படாகையும் பல்பூங் கொடியும்
சித்திரித் தெழுதிய வித்தக விமானமும்
இருநிலத் தியங்கு மியந்திரப் பாவையும்
அருவினை நுட்பத் தியவனப் புணர்ப்பும்
பொத்தகை யானையும் பொங்குமயிர்ப் புரவியும்
சித்திர மாலையு மக்கடந் தொட்டிலும்
வெண்டா ரொழுக்கும் விளக்குறு பூதமும்
தெரிவுற லரிய பலகலக் குப்பையும்
கைந்நிமிர் விளக்கு.........................ம்
எண்ணரும் பல்பொறி யெந்திரப் பொருப்பும்
வண்ண.......................................களும்
கண்ணு ளாளர் கைபுனை கிடுகும்
நாடு நகரமு மாடுநர் பாடுநர்
ஆடலும் பாடலு மன்னவை பிறவும்
கூடிக் காணு மாடத் தோங்கிய
தண்கோ சம்பிப் பெண்சன நோக்கி
விண்மிசை யவரும் விழையுங் காரிகை
மண்ணியன் மகளிரு ளுளள்கொன் மற்றெனச்
சேணெடுந் தெருவுஞ் சிற்றங் காடியும்
நாற்றொடு புணர்ந்த நலம்புணர் மகளிர்
நெரியுந் தெருவு நிரம்பிய மறுகும்
மன்றமுங் கோணமுஞ் சென்றுசென் றுலாஅய்
யாறுகிடந் தன்ன வீறுசால் வீதிதொறும்
ஆனுது திரிதரு மானச வேகன்

(மானசவேகன் மதனமஞ்சிகையைக் காணல்)

கோலக் கோயிலு நால்வகை நிலனும்
புடைசூழ் நடுவட் பொன்மலர்க் காவின்

இடைசூழ் ழருவி யேந்துவரைச் சென்னி
ஆய்மயி லகவு மணிச்சுனைக் குன்றின்
மீமிசை மருங்கின் மின்னென நுடங்கிப்
பழவிறன் மூதூர் விழவணி நோக்கி
மும்மணிக் காசும் பன்மணித் தாலியும்
பொன்மணிக் கொடியும் பூணுஞ் சுடர
மதன மஞ்சிகை நின்றோட் கண்டு
சென்றன னணுகி நின்றினிது நோக்கி
வெள்ளி விமானம் விதிர்விதிர்த் தேறி
வள்ளி மருங்கி னொள்ளிழை யேழையைக்
கச்சார் வனமுலை விச்சா தரியே
ஆவளென் னுமையமோ டயலோர்
தேவ மாடஞ் சேர்ந்தன னிருந்து

(மதனமஞ்சிகை பூதவடிவமொன்றைக் கண்டு அஞ்சுதல்)

வருவோர்ப் பற்றி வாங்குபு விழுங்கும்
இணைய நுட்பத் தியவன ரியற்றிய
பெருவலிப் பூதத் துருவுகண் டுணரார்
இன்னுயி ருண்ணுங் கூற்ற மிதுவெனப்
பொன்னிழை சுடரப் பொம்மென வுராஅய்
மைகொள் கண்ணியர் வெய்துயிர்த் திரிய
மாவீ ழோதி மதனமஞ் சிகையும்
ஏயென வஞ்சுஞ் சாய லேக்கி

(மானசவேகன் எண்ணுதல்)

விச்சை மன்ன னச்சுவன ளாகி
விறல்கெழு விஞ்சையர் வெள்ளியம் பெருமலை
இறைகொண் டிருந்த வெழிலுடை மகளிருள்
யாவரு மில்லைமற் றிவளோ ரனையார்
யாவ ளாயினு மெய்துவென் யானென
ஒருதலை வேட்கை யுண்ணின் றுநலியப்
பெருவினை விச்சையிற் றெரிய நோக்கி

(நரவாணதத்தனும் மதனமஞ்சிகையும் இன்புறுதல்)

உயர்நிலை யுலகத் தவரும் பிறரும்
மேனிலை யுயர்ச்சியின் மெய்யா மதிக்க

வளமை நன்னிலத் திளமுளை போந்து
கல்வி நீரிற் கண்விட்டுக் கவினிச்
செல்வப் பல்கதிர் செறிந்துவனப் பேறி
இன்பம் விளைந்த நன்பெரு நெல்லின்
ஆண மடையிற் காண்வரப் பற்றித்
துப்புர வடிவி.......தோயினும்
வேட்கை நாவின் விருப்பொடு சுவைக்கும்
மாற்ற மில்லா மனத்தின ராகி
வலியும் வளமையு....க்கு........யும்
பொலிவும் புகழும் பொருந்திய சிறப்பிற்
குவம மாகு முதயண னொருமகன்
அவமில் சூழ்ச்சி யாய்தா ரண்ணலும்
ஆணு முட்கு மச்சமும் பயிர்ப்பும்
பேணுங் கோலமும் பெருந்தகைக் கற்பும்
வாணுதன் மகளிர் மற்றுப்பிறர்க் கின்றித்
தானே வவ்விய தவளையங் கிண்கிணி
மானேர் நோக்கின் மதனமஞ் சிகையும்
ஆனுக் காதலோ டமர்ந்துவிளை யாடிக்
காமர் பள்ளியுட் கட்டளை பிழையாத்
தாமரை நெடுங்கண் டந்தொழி றுடங்கப்
பள்ளி கொண்ட பொழுதிற் பையென

(மானசவேகன் மதனமஞ்சிகையை எடுத்துச் செல்லல்)

ஒள்வினை மாட முள்குவ னாகி
விச்சை மறைவி னச்சமொன் றின்றி
இகன்மிகு குமரனைத் துயின்மிசைப் பெருக்கிக்
கயன்மிகு கண்ணியைக் கவவுப்பிணி நீக்கிப்
புகலு முள்ளமோ டகலத் தடக்கி
இகல்கொள் வீரிய னிகழ்தல் செல்லா
மண்மிசை வந்தனென் மயக்கற வின்று
விண்மிசை யுலகிற்கு விழுப்பொருள் பெற்றேன்
என்னு முவகையின் மின்னேர் நுடங்கிட
மிளிருங் கச்சையோ டொளிவிசும் பெழுந்து
பொ........................................

# செய்யுட்களின் முதற் குறிப்பகராதி.

[ எண் - பக்க எண். ]



# அரும்பத அகராதி.



அ - அழகு.
அகக் கோளாளர்-அகம்படிப் பெண்கள்.
அகணி - உட்பட்டவன்.
அகத்தரண் - அரணின் உள்ளிடம்.
அகத்தோடு - உள்ளிதழ்.
அகப்பாட்டண்மையன் - மிக நெருங்கியவன்.
அகம் - உள்ளிடம், மனம்.
அகமணைத்தட்டு - தேருக்கு உள்ளிடத்துள்ள ஆசனப்பலகை.
அகல் - ஒரு பாத்திரம்.
அகல்வு - அகலம்.
அகலம் - மார்பு.
அகவல் - மயிலின் குரல்.
அகவை - ஒருவகை ஆடை.
அகழ்கடல் - கீழ்கடல்.
அகழ்வினையாளர் - நிலத்தைத் தோண்டும்-தொழிலுடையோர்.
அகற்சி - நீங்குதல்.
அகற்றம் - அகலம்.
அகன் - மனம்.
அகன்மடி - அகன்ற ஆடை.
அகன்ற ஞானம் - விரிந்த அறிவு.
அகிற்குறை - அகிலின் துண்டம்.
அகிற் புகையகல் - அகிலைப் புகைத்தற்குரிய ஒருவகைப்பாத்திரம்.
அகைதல்-தளிர்த்தல், வருந்துதல்.
அங்கண்-அவ்விடம்,அழகிய இடம்.
அங்காங்கு - அங்கங்கு.
அங்காடி - கடை.
அங்காத்தல் - வாயைத் திறத்தல்.
அங்குலி - கைவிரல்.
அங்கையின் அவித்தல் - கையைக் காட்டி அடக்கல்.
அங்கையெற்றல்(எறிதல்)-கையைத் தட்டுதல்.
அங்கை விதிர்த்தல் - கைகளை உதறுதல்.
அச்சமுயக்கம் - பயத்தினால் தழுவிக் கொள்ளல்.
அச்சு - அச்சம்.
அச்சுயிர்ப்பு - அச்சத்தினால் உண்டாகும் பெருமூச்சு.
அசதிக்கிளவி - பரிகாசச் சொல்.
அசதியாடல் - நகையாடல்.
அசா - விருப்பம்.

அசாஅய் - மெலிந்து, வருந்தி.
அசிப்பு - அவமதித்தல்.
அசுணம் - இசையறிவதொரு
விலங்கு. [தல், நீரூறுதகுழி.
அசும்பு - ஊற்று, துளி, துளித்
அசைஇ-அசைந்து, தங்கி, வருந்தி.
அசைத்தல் - கட்டுதல்.
அசைதல் - தங்குதல், மெலிதல்,
அசைவு - தளர்ச்சி. [வருந்தல்.
அஞ்சிறை - அகஞ்சிறை.
அஞ்சுதக - அஞ்சும்படி.
அஞர் - துன்பம்.
அட்டில் - உணவுசமைக்கும் இடம்.
அட்டேண் கம்பல் - உண்போர் ஆர
அடங்க - இல்லையாம்படி. [வாரம்.
அடங்கார் - பகைவர்.
அடர் - இதழ், தகடு.
அடர்மை - நொய்ம்மை.
அடல் - காய்சசுதல், வன்மை.
அடிக்கலம் - பாதத்திலணியும் ஆப
ரணம்.
அடிகள் - பெரியோரையும் துறவி
யர்களையும் குறிக்கும் சொல்.
அடிச்சுவடு - பாதத்தின் அடை
யாளம்.
அடிச்செருப்பாதல் - அடிமையா
அடிசில் - உணவு. [தல்.
அடிசிற் குழிசி - சோற்றுப்பானை.
அடிசிற் பள்ளி - உணவு சமைக்கும்
அடித்தி - அடியாள். [இடம்.
அடித்துகளாற்றல் - கால்கழுவல்.
அடிதொடை - அடிவைத்து நிற்ற
லும் அம்புகளைத் தொடுத்தலும்.
அடிநிலைச் சாத்து - அங்கவடி.
அடிமுதல் - பாதம். [தொண்டு.
அடியுறை - அடியவர், அடியவன்,
அடுக்கம் - தொடர், பரப்பு.
அடுமடை - சமைக்கும் உணவு.
அடை - இலை.
அடைஇ - அடைந்து.
அடைச்சல் - செருகுதல்.
அடையாண் கிளவி - அடையாள
அடையார் - பகைவர். [வார்த்தை.
அடையாள் - அடையாளம்.

அண்டை - பக்கம்.
அண்ணுதல் - நெருங்கல்.
அணங்கு - தெய்வப் பெண், வருத்
அணங்குதல் - வருத்துதல். [தம்.
அணவருதல் - மேலெழுதல்.
அணி - அழகு, ஆபரணம், படை
அணிகம் - அணிவோம். [வகுப்பு.
அணிகலப்பேழை - ஆபரணப்
பெட்டி.
அணித்தக இருத்தல் - அருகில்
இருத்தல், அழகு பெற இருத்
அணித்து - அருகிலுள்ளது. [தல்.
அணிப்புக்கோர் - அணிமையிற்
சென்றோர்.
அணிமாராட்டம் - அழகிய மகா
ராஷ்டிர தேசத்து அலங்காரம்.
அணில்வரி - கத்தரிகையின் ஒரு
அத்தம்-அத்தமயகிரி, வழி. [வகை.
அத்தவத்திரதம் - ஒருவகை மருந்
துப் பொருள். [லக்கம்.
அத்தாணி - ஆஸ்தானம், திருவோ
அத்திகோசம் - யானையெடுத்தற்
குரிய செல்வம்.
அத்து - சிவப்பு, துவர்.
அத்தை : அசை.
அதர் - வழி.
அதர்வை - ஒருகொடி, வழி.
அதன்மி - குலவொழுக்கத்துக்கு
மாறானவன்.
அதிங்கு - அதிமதுரம்.
அதிர்கண் - முழங்குகின்ற பக்கம்.
அதிர்தல் - கலங்கல், நடுங்கல்.
அதிரல் - புனலிக் கொடி.
அதுக்கல் - அடித்தல். [கிணறு.
அந்தக் கேணி - உள்ளே மறைந்த
அந்தக் கோட்டி - இரகசியமாகக்
கூடும் கூட்டம்.
அந்தணி - அந்தணப் பெண்பால்.
அந்தப் போதிகை - யானைகளின்
பின்னங்காற் சங்கிலி.
அந்தம் - இரகசியம்.
அந்தரச் செலவு - ஆகாயவழியே
செல்லுதல்.
அந்தரம் - ஆகாயம், வேறுபாடு.

அந்திச் சங்கம் - மாலைக் காலத்துக் கூடும் கூட்டம்.
அநங்கத்தானம் - காமன் கோயில்.
அப்புப் புதை - அம்புக்கட்டு.
அம்பலம் - பொதுவிடம்.
அம்பி - ஓடம்.
அம்மை - அமைதி.
அமர்தல் - ஒத்தல், விரும்புதல்.
அமரன் - தேவன், போர்செய்தற் குரியவன். [பார்வை.
அமரா நோக்கம் - பொருந்தாத
அமராபதி - அமராவதி; இந்திரன் அரசிருக்கை நகர்.
அமராமன்னன் - பகையரசன்.
அமரார் - பகைவர்.
அமரிய - விரும்பிய. [வன்.
அமரிறை - இந்திரன், தேவர் தலை
அமலல் - நெருங்கல், பெருகல்.
அமலை - திரள். [க்கை.
அமளிப்படை - படுத்தற்குரிய படு
அமிர்தம் (அமிர்து) - அமுதம், கனி, பால். [பால், மணம்.
அமிழ்தம் (அமிழ்து)-உணவு, பழம்,
அயங்குதல் - அசங்குதல்.
அயர்த்தல் - மறத்தல்.
அயர்தல் - வருந்துதல், விரும்பிச்
அயற்புலம் - வேற்றுநாடு.[செய்தல்.
அயறு - புண்வழலை.
அயாஅநோய்- வருத்தமாகிய நோய்.
அயாம் - வருந்தும்.
அயாவுயிர்த்தல் - இளைப்பாறுதல்.
அயிர் - நுண்மணல்.
அயிர்ப்பு - ஐயம்.
அயிராணி - அருந்ததி.[னது யானை.
அயிராபதம் (ஐராவதம்) - இந்திர
அயிரை - ஒருவகை மீன்.
அயில் - கூர்மை.
அயினி - ஆலத்தி, சோறு.
அரக்கல் - துடைத்தல்.
அரக்குறு நறுநீர் - சாதிலிங்க நீர்.
அரங்கம் - ஆடும் அவை. [மதில்.
அரண் (அரணம்) - பாதுகாப்பு,
அரணக்கருவி - கவசம். [டம்.
அரணகம் - அரண்களின் உள்ளி
அரணி - தீக்கடை கோல்.
அரத்தக்கஞ்சிகை - சிவப்புத்திரை.
அரத்தகம் - செம்மைநிறம்.
அரத்தப்பஞ்சி - செம்பஞ்சு.
அரத்தம் - சிவப்பு.
அரம்பு - குறும்பு.
அரம்பை - தேவமகள்.
அரமகளிர் - தெய்வமகளிர்.
அரவு - நாகமரம், பாம்பு.
அராவு - மூழ்குபவை.
அராந்தாணம் = அருகஸ்தானம் - அருகக்கடவுளாலயம்.
அரி - உள்ளிடுபரல், கண்ணிலுள்ள வரி, கோடு, சிலம்பின் உண்மணி, தவளை, மான்.
அரிக்கிண்கிணி - தவளைவாய்போன்ற வாயையுடைய கிண்கிணி.
அரிச்சாலேகம் - மான்கண்போன்ற சாளரம்.
அரிச்சிறு பறை - அரித்தெழுங் குரலையுடைய சிறுபறை.
அரிதாரம் -ஒரு வாசனைப்பொருள்.
அரிபெய்புட்டில் - உள்ளே பரலைப் பெய்த கெச்சை.
அரிமா (அரிமான்) - சிங்கம்.
அரியல் - கள்.
அரில் - பிணக்கு.
அருகத்தானம் - அருகக்கடவுளது கோயில்.
அருகர் (அருகல்) - பக்கத்தில்.
அருங்கடிவாயில் - காவலையுடைய வாயில். [முடி, கப்பல்.
அருங்கலம் - அரிய ஆபரணங்கள்,
அருத்தம் - உரை, செல்வம்.
அருப்பம் - அருமை.
அரும்பதம் - அரிய உணவு.
அருமைக்காலம் - நல்வினையில்லாத
அரை - அடி, இடை. [காலம்.
அரைப்பு - அரைத்தல், எண்ணெய் போகத் தேய்த்துக்கொள்ளும் பொருள். [குசம்.
அரைமதி யிரும்பு - ஒருவகை அங்
அரையிருள் நடுநாள் - இடையாமம்.
அல்கிரை - மிக்க இரை.

அல்கூணமையம் - இரவில் உணவை உண்ணுகின்ற சமயம்; இட்டுவைத்த உணவை உண்ணுங்காலமுமாம்.
அல்லதை - அல்லது.
அல்லி - அகவிதழ்.
அல்வழி - இருளில்.
அலகை - உரையாணி, தலையளவு.
அலங்குதல் - அசைதல்.
அலத்தல் - இளைத்தல்.
அலமரல் - கலங்கல், சுழலுதல்.
அலர் - பழிமொழி, மலர்.
அலவலை நீர்த்து - அலமருந்தன்மையுள்ளது.
அலவன் - நண்டு.
அலைத்தல் - வருத்தல்.
அவணை - அவ்விடம்.
அவந்திகை - அவந்தி, வாசவதத்தை.
அவந்தியன் - பிரச்சோதனன்.
அவரபக்கம் - கிருஷ்ணபக்ஷம்.
அவல் - ஒருவகைத் தின்பண்டம், பள்ளம்.
அவலம் - துன்பம்.
அவவு - அவா.
அவி - அவிப்பாகம், தேவருணவு.
அவிதல் - அழிதல்.
அவிழ் - சோறு.
அவிழ்த்தல் - வெளியிடுதல்.
அவிழ்தல் - மலர்தல்.
அவிழ்பதம் - மலருஞ்செவ்வி.
அவைப்பரிசாரம் - சபையைவணங்கல்.
அழல் - கோபம், தீ, வெப்பம்.
அழல்மாட்டல் - தீயை மூட்டல்.
அழலார்த்தல் - தீப்பெய்தல்.
அழற்கொடி - தீக்கொழுந்து.
அழற்சி - கொதிப்பு, கோபம்.
அழற்செல்வன் - சூரியன்.
அழித்து - மீட்டு.
அழிதல் - வருந்துதல்.
அழிவு - மெலிவு.
அழுங்கல் - வருந்தல்.
அழுவம் - பரப்பு.
அழைஇ - அழைத்து.
அள்ளல் - சேறு.
அள்ளிலை - செறிந்த இலை.
அளக்குநர் - அளப்போர்.
அளகம் - முன்னுச்சிமயிர்.
அளத்தல் - நுகர்தல்.
அளப்பு - நுகர்ச்சி.
அளறு - சேறு.
அளி - அன்பு, இரக்கம், வண்டு.
அளித்தல் - அருளுதல்.
அளை - தயிர், புற்று.
அளைஇ - கலந்து.
அற்பு - அன்பு.
அற்றக்காலை - சோர்வடையுங்காலம்.
அற்றம் - அறுதி, சமயம், சோர்வு.
அற்று - அத்தகையது.
அறச்சோற்றட்டில் - தருமசத்திரம்.
அறத்தாறு - அறநெறி.
அறத்தியல்கொட்டில் - தருமசாலை.
அறப்பெறுதல் - முற்றப்பெறுதல்.
அறம் - கற்பு, தருமம்.
அறல் - கருமணல், நீர்.
அறவாசிரியன் - மதகுரு.
அறவை - முற்பிறப்பில் அறஞ்செய்த உயிர்கள்.
அறவோர்பள்ளி - துறவியரிருக்கும் ஆச்சிரமம்.
அறிபயிர் - சங்கேதவொலி.
அறிபு - அறிதல்.
அறிவர் - ஞானியர்.
அறுகை - அறுகம்புல்.
அறுவில் தெண்ணீர் - வற்றுதல் இல்லாத தெள்ளிய நீர்.
அறுவை - ஆடை.
அறை - துண்டு, பாத்தி, பாறை, வீட்டின் ஒரு பகுதி.
அறைஇ - மொழிந்து.
அறைதல் - முழங்கல்.
அறைபோதல் - கீழறுதல், வஞ்சித்தல்.
அறையுண்ணுமை - பிறராற் கீழறுக்கப்படாமை.
அன்மை - அல்லாமை.
அன்று - கெட்டது.
அன்னர் - அத்தகையவர்.
அன்னுழி - அவ்விடம்.
அனந்தர் - தூக்க மயக்கம்.
அனித்தம் - அனிச்சம்.
அனுக்கல் - வருத்தல்.
ஆ - ஆச்சாமரம், பசு.

ஆக்கம் - ஆகுதல், செல்வம், வளர்
ஆக்கை - யாக்கை. [சசி.
ஆகரித்தல் - சேர்த்தல்.
ஆகியர் - ஆக.
ஆகு - ஆவேன். [கம்.
ஆகுலம் - ஆரவாரம், துன்பமுழக்
ஆசிடை (ஆசிஷை) - ஆசீர்வாதம்.
ஆசினி - பலா.
ஆசு - குற்றம், விரைவு.
ஆட்டல் - வருத்தி ஓட்டல்.
ஆட்டியர் - பெண்கள்.
ஆட்டு - விழவு.
ஆட்டுதும் - வருத்துவேம்.
ஆடகம் - ஒருவகைப் பொன்.
ஆடல் - வெல்லல்.
ஆடவர் - வீரர்.
ஆடி - கண்ணாடி.
ஆடூஉ - ஆண்.
ஆண் - ஆணமென்பதன் விகாரம்.
ஆண்டொழில் - ஆண்மைச் செய்
ஆணம் - அரணம், அன்பு. [கை.
ஆணி - மேற்கோள்.
ஆத்தல் - கட்டல்.
ஆத்தி - ஒரு மரம்.
ஆத்திரை - யாத்திரை.
ஆதிமுற்றம் - விவாக முதலியவை நடத்தற்குரிய முதல் முற்றம்.
ஆப்பு - யாப்பு.
ஆய்ந்த - மெலிந்த.
ஆய்மலர் - அழகிய மலர்.
ஆயம் - கூட்டம், மகளிர் திரள்.
ஆயினும் : ஓரெண்ணிடைச்சொல்.
ஆயுட்டானம் - ஆயுளைத்தரும் கொ
ஆயொளி - அழகிய ஒளி. [டை.
ஆர்கலி - ஆரவாரம்.
ஆர்த்தல் - கட்டல், முழங்கல்.
ஆர்பதம் - உணவு.
ஆர்வலர் - அன்புடையார்.
ஆர்வு - நிறைவு.
ஆரத்துணி - சந்தனத்துண்டம்.
ஆரம் - ஆரக்கால், சந்தனம், மாலை, முத்து.
ஆரல் - ஒருவகை மீன்.
ஆராட்டு - நீராடுதல்.
ஆரியச்செப்பு - ஆரியதேசத்தில் இயற்றிய செப்பு.
ஆரியர் - பெரியோர்.
ஆலவட்டம் - ஒருவகை விசிறி.
ஆலி - நீர்த்துளி.
ஆவணம் - கடைவீதி.
ஆவது - ஆக்கம், பயன்.
ஆவதை - அதனை.
ஆவநாழிகை - அம்பறாத்தூணி.[ல்.
ஆவிக்கொள்ளல்-கொட்டாவி விட
ஆவித்தல் - பெருமூச்செறிதல்.
ஆழமை - ஆழம். [மோதிரம்.
ஆழி - கடற்கரை, கரை, சக்கரம்,
ஆள் - ஆண்மை, வீரர்.
ஆற்றுளி - முறையாக. [வோர்.
ஆறலைஇளையர் - வழிப்பறி செய்
ஆறாட்டு - ஆற்றில் நீராடுதல்.
ஆன் - அங்கே, பசு.
ஆனம் - ஆணம், பாதுகாப்பு.
ஆனிலை - அந்த நிலை.
ஆனெய் - பசுவின் நெய்.
ஆனைந்து - பஞ்ச கவ்வியம்.
இகக்கல் (இகத்தல்) - நீங்கல்.
இகணை - ஒரு கொடி; ஒருமரமு
இகல் - பகை, மறம். [மாம்.
இகலல் - பகைத்தல்.
இகுத்தல் - அறைதல்.
இகுப்பம் - தாழ்வு.
இங்கண் - இவ்விடம்.
இங்கல் - தங்கல்.
இசின் : ஓர் இடைச்சொல்.
இசையோர் தேய இயக்கம் - கந்
இஞ்சி - மதில். [தர்வ மார்க்கம்.
இட்டிகை - செங்கல்.
இட்டிடர் - மிக்க துன்பம்.
இட்டிடை கழி - இடுகிய இடை
இட்டு - சிறிது. [கழி.
இடன் - இடம், சமயம்.
இடி - மா.
இடீஇ - இட்டு, எழுதுவித்து.
இணர் - பூங்கொத்து.
இணை - ஒப்பு.
இதண் - பரண்.
இதயவாசனை - ஓராபரணம்.

இந்திரவில் - வானவில்.
இமிழ்த்தல் - கட்டுதல்.
இமிழ - மிக. [விளங்கல்.
இமைத்தல் - மின்னுதல், விட்டு
இமையோர் - தேவர்.
இயக்கம் - இயங்குதல்.
இயக்கி - ஒரு பெண்பாற் றெய்வம்.
இயம் (இயமரம்) - வாத்தியம்.
இயலல் - நடத்தல்.
இயற்கை - இயல்பு.
இயூகி - யூகி.
இர - இரா. [தானவகையுள் ஒன்று.
இரணியகருப்பம் - அரசர்செய்யும்
இரலை - ஆண்மான்.
இரவு - இருள்மரம்.
இரிதல் - கெட்டோடுதல்.
இரீஇ - இருத்தி.
இருங்கண் - கரியகண்.
இருப்பகல் - இரும்பினுற் செய்யப்
பட்ட அகலென்னும் பாத்திரம்.
இருப்பை - ஒருமரம்.
இருள் - இரவென்னும் மரம்.
இரைதல் - முழங்குதல்.
இல் - தேற்றாமரம்.
இலஞ்சி - குளம்.
இலமலர் - இலவமலர்.
இலவந்திகை - எந்திரவாவி. [ணம்.
இலேகை - சித்திரம், தழும்பு, வண்
இலைச்சித்தல் - முத்திரைவைத்தல்.
இவர்தல் - பரத்தல்.
இவறல் - பேராசைப்படுதல்.
இவுளி - குதிரை.
இழிகை - கைச்சுரிகை.
இழுக்கு - வழுக்குதல்.
இழுது - நெய்.
இழை - ஆபரணம், நூல்.
இழைப்பு - செய்தொழில்.
இளகல் - வழுக்கல்.
இளி - இழிவு.
இற்று - இன்னும்.
இறக்கல் - கடத்தல்.
இறடி - தினை.
இறாஅல் - தேனடை.
இறுங்கு - சோளம்.

இறுத்தல் - தங்குதல்.
இறுதி - மரணம்.
இறுபு - இறத்தல்.
இறும்பு - குறுங்காடு.
இறுவரை - பெரியமலை.
இறை - அரசன், கப்பம், கையின்
சந்து, சிறிது, சிறை, தங்குதல்,
இன்றிய-இல்லாத. [தலைமை,மூலை.
இனி - இப்பொழுது.
ஈடு - இடுதல், எளிவரவு.
ஈம் - ஈயும்.
ஈரம் - அன்பு.
ஈன் - இவ்விடம்.
ஈனுத்தாயர் - செவிலித்தாயர்.
உக்கம் - சிற்றாலவட்டம்.
உகவை - மகிழ்ச்சி.
உகிர் - நகம்.
உசா - கேள்வி.
உசிர் - உயிர்.
உஞ்சேனை - உச்சைனிநகரம்.
உட்கு - அச்சம்.
உடங்கு - சேர.
உடீஇ - உடுத்து.
உடு - நாணைக்கொள்ளும் இடம்.
உண்ணம் - உஷ்ணம்.
உணஅ - உண்டு.
உத்தரம் - விடை.
உத்தி - ஓராபரணம், படப்பொறி.
உதள் - ஆடு.
உந்தி - கொப்பூழ்.
உம்பல் - தொகை.
உம்மை - முற்பிறப்பு.
உமிழ்தல் - புறப்படுதல்.
உயர்பு - உயர்ச்சி.
உயரி - உயர்த்தி.
உயிர் - மூச்சு.
உயிர்வைத்தல் - இறத்தல்.
உரம் - வன்மை
உரற்றல் (உரறல்) - முழங்குதல்.
உராய் - பெயர்ந்து.
உரிஞ்சல் - தேய்த்தல்.
உரிது - உரித்து.
உரிமை - மனைவி.
உரீஇ - உருவி.

உரு - அச்சம்.
உருத்தல் - கோபித்தல், தோன்று
உருப்பு - தோற்றம்,வெம்மை.[தல்.
உரும் - இடி.
உருவி - உருவமுடையாள்.
உருவு - வடிவம்.
உருள்படி - ஒருவகைச்சோபானம்.
உரை - புகழ்.
உரைஇ - உரைத்து.
உரைத்த - தேய்த்த.
உரைத்ததை - சொல்லும் செய்தி.
உரைம் - சொல்லும்.
உரோணி - உரோகிணி.
உலகபுராணம்-உலகத்தின் பழைய
வரலாற்றைக் கூறும் நூல்.
உலப்பு - அழிதல்.
உலம் - திரண்டகல்.
உலம்பல் - முழங்கல்.
உலவை - ஒருவகை மரம்.
உலாப்புறுத்தல் - அழித்தல்.
உலைவு - அழிவு.
உவணம் - கருடன்.
உவல் - தழை.
உவலைக்கேணி - தழையால் மூடப்
உவா - பூரணை. [பட்ட கிணறு.
உவாத்தி - உபாத்தியாயன்.
உவாமதி - கலைநிரம்பிய சந்திரன்.
உவாவ - நிறைய.
உழலை - இரண்டு மரங்களை நட்டு
அவற்றின் துவாரங்களில் மூங்கி
லைப் புகுத்தி வைத்திருக்கும்
இடம். [டர்ந்துவந்த அன்பு.
உழுவலன்பு - எழுபிறப்பிலும் தொ
உழுவை - புலி.
உழை - பக்கம், மான்.
உழைக்கலம் - பக்கத்தில்வைத்துக்
கொள்ளும் பாத்திரம்.
உள்ளம் - ஊக்கம், மனம், மன
உள்ளழல் - பசித்தீ. [வெழுச்சி.
உள்ளுதல் - நினைத்தல்.
உளமை - உள்ளமை.
உளர்த்துபு - வலிய அலர்த்தி.
உளர்தல் - வகிர்தல்.
உளி - ஓராயுதம்.

உளை - குதிரையின் தலையாட்டம்.
உற்றது - துன்பம்.
உறத்தல் - செறிதல், மிகுதல்.
உறீஇ - உறுவித்து.
உறுகண் - துன்பம்.
உறுகண் வெந்தொழில் - மரணம்.
உறுத்தல் - ஒத்தல்.
உறுநர் - உற்றார், தோழர்.
உறுபுரி - மிக்க முறுக்கு.
உறுவு - உறுதல்.
உறைத்தல் - துளித்தல்.
ஊக்கம் - உள்ளக்கிளர்ச்சி.
ஊக்கு - அசைத்தல்,ஊக்குதல்.
ஊகி - யூகி.
ஊர்கோள் - பரிவேடம்.
ஊர்ச்சி - ஊர்தல்.
ஊர்தரல் - பரத்தல்.
ஊர்தி - வாகனம்.
ஊராண்குறிப்பு -உபகாரக்குறிப்பு.
ஊழ் - முறைமை, விதி.
ஊழி - யுகம்.
ஊற்றம் - முயற்சி, வன்மை.
ஊறல் - கள்.
ஊறு - துன்பம்.
ஊனம் - குற்றம்.
எஃகு - வேற்படை.
எக்கர் - இடப்பட்ட மணல்.
எக்கல் - மேலே கிளர்தல்.
எஞ்சல் - உயிர்நீத்தல்.
எட்டிப்பட்டம் - வணிகர்களுக்கு
அளிக்கப்படுவதொருபட்டம்.
எடுத்தல் - நீக்குதல்.
எண்கு - கரடி.
எதிர்மை - தோன்றுதல்.
எதிர்வினை - வருஞ்செயல்.
எம்பரும் - எவ்விடமும்.
எமரன் - எம்மவன்.
எயில் - மதில்.
எயினர் - வேடர்.
எரிமலர் - தாமரைமலர்.
எருக்கல் - அடித்தல்.
எருத்தம் - பிடர், புறக்கழுத்து.
எருஉக்குரல் - தாக்குதலால் உண்
எல்லி - இரவு. [டாகும் குரல்.

எல்லொளி - மிக்க ஒளி.
எவ்வம் - இளிவரவு, துன்பம்.
எழாஅ - எழுந்து
எழிலி - அழகுடையவள், மேகம்.
எழினி - திரைச்சீலை.
எழீஇ - எழுந்து, எழுப்பி.
எழு - உழலைமரம், தூண்.
எழுதுதல் - பண்ணுதல்.
எழுந்தன்று - எழுந்தது.
எழுமை - எழுபிறப்பு.
எள்கல் - மெலிதல்.
எற்றல் - தாக்கல்.
எறுழ் - வலி.
என்முதல் - என்னுடைய வரலாறு.
என்னது - எத்தகையது.
என்னதும் - சிறிதும்.
என்னரும் - எதுவும்.
என்னின் - எதனால்.
என்னும் - சிறிதும்.
எனைவர் - எவ்வளவுபேர்.
ஏ - அம்பு, இரக்கக்குறிப்பு.
ஏஎம் - ஏவி.
ஏஎர் - அழகு.
ஏஎல் - எழுதல்.
ஏகாவலி - ஒற்றை வடம்.
ஏடு - பனையேடு.
ஏண் - வலி.
ஏதிலன் - அயலான்.
ஏதின்மை - அயலானதன்மை.
ஏது - காரணம்.
ஏப்பாடு - அம்பு வீழ்தல். [பொன்.
ஏமம் - பள்ளியறை, பாதுகாவல்,
ஏமாத்தல் - கலக்கமுறுதல்.
ஏமாப்பு - பாதுகாப்பு.
ஏமுறவு - மயக்கம்.
ஏயது - ஏவியது.
ஏயர் - ஹைஹயர்.
ஏர் - அழகு, எழுச்சி.
ஏல்வு - பொருத்தம்.
ஏலொளி - எழுச்சியையுடைய ஒளி.
ஏழ்ச்சி - எழுச்சி. [விழித்தல்.
ஏற்றல் - எழுதல், தர்க்கமிடுதல்,
ஏற்று - ஏற்றம், ஏறுதல், துயி
லுணர்ந்து.

* எக

ஏற்றோர் - போரை மேற்கொண்
ஏறு - விலங்கின் ஆண். [டோர்.
ஏன்ற - பொருந்திய.
ஏனவை - மற்றையவை.
ஐங்கணைக் கிழவன் - மன்மதன்.
ஐது - அழகியது, வியப்புடையது.
ஐயர் - முனிவர்.
ஐயவி - வெண்சிறுகடுகு.
ஐவகைச்சோதிடர் - சந்திரன், சூரி
யன், மற்றக்கோள்கள், 27 நக்ஷத்
திரங்கள், தாரகைகள்.
ஐவகை வாசம் - இலவங்கம் முத
ஐவனநெல் - மலைநெல். [லிய ஐந்து.
ஐவாய் - ஐந்து வாய்.
ஒக்கல் - சுற்றத்தார்.
ஒசிதல் - துவளல்.
ஒட்டல் - சேர்தல்.
ஒட்டார் - பகைவர்.
ஒட்டு - சேர்ந்து உறைதல்.
ஒடிவு - ஒழிதல்.
ஒண்மை - இயற்கையழகு.
ஒத்தன்று - ஒத்தது.
ஒதுங்கல் - நடத்தல்.
ஒப்புரவு - உலகநடையறிந்து செய்
ஒய்த்ல் - செலுத்தல். [தல்.
ஒய்யென - விரைய.
ஒராஅ - நீங்காத.
ஓரீஇ - நீங்கி.
ஒருக்கல் - ஒருசேர ஆக்கல்.
ஒருகாழ் - ஒற்றைவடம்.
ஒருத்தல் - விலங்கின் ஆண்.
ஒருதலை - நிச்சயம்.
ஒருப்பாடு - ஒருப்படுதல்.
ஒல்கல் - தளர்தல்.
ஒல்லை - விரைய.
ஒல்வன் - பொருந்துவேன்.
ஒலிப்பு - ஒலித்தல்.
ஒழுக்கம் - ஆசாரம், வரிசை.
ஒழுக்கு - ஒழுக்கம், செலவு, வரி
ஒழுகல் - நீண்டு வளர்தல். [சை.
ஒள்ளொளி - மிக்க ஒளி.
ஒளிக்களம் - மறைவிடம்.
ஒளியவர்கள் - தேவர்கள்.
ஒளியின்று - ஒளியாமல்.

ஒற்கம் - தளர்ச்சி, வறுமை.
ஒற்றுவர் - ஒற்றியுணர்வார்.
ஒன்றார் - பகைவர்.
ஒன்று - சிறிதும்.
ஒன்றோதோர் - பகைவர்.
ஓக்கம் - உயர்ச்சி.
ஓச்சல் - அடித்தல், உயர்த்தல், செலுத்தல், வீசுதல்.
ஓசனை -யோசனை.
ஓடாத தானை - முதுகிடாத படை.
ஓடை - யானையின் முகபடாம்.
ஓத்து - வேதம்.
ஓதி - கூந்தல், ஞானம்.
ஓப்பல் - ஓட்டல்.
ஓம்படுத்தல் (ஓம்படை) - அடைக்கலங் கொடுத்தல், பாதுகாக்கச் செய்தல்.
ஓம்பல் - ஒழிதல், பாதுகாத்தல்.
ஓமாலிகை - தூபத்திரவியம்.
ஓமை - ஒரு மரம்.
ஓர்த்தல், (ஓர்ப்பு) - எண்ணுதல், கூர்ந்து கேட்டல்.
ஓரன்ன - ஒத்த.
ஓரை - மகளிர் விளையாட்டு. [டல்.
ஓலுறுத்தாடல் - முழங்கிவிளையா
ஓலை - காதோலை, திருமுகம், பனை
ஓவம் - சித்திரம். [யோலை.
ஓவவினையாளர், (ஓவியர்) - சித்திரகாரிகள்.
ககணி - ஆகாயத்திலுள்ள பொருள்களின் கதியை அறிபவன்.
கச்சம் - ஒரு பேரளவு, கச்சை.
கச்சை - வீரர்கள் இடையிற் கட்
கசிவு - துன்பம். [டும் வார்.
கஞ்சிகை - உருவுதிரை, திரை, முகமூடி. [மூட்டுவாய்.
கஞ்சிகைக்கொளூ - திரையின்
கஞ்சிகைச் சிவிகை - மூடுபல்லக்கு.
கஞ்சிகை வையம் - திரையால் மூடிய வண்டி.
கஞலுதல் - நெருங்குதல்.
கட்கம் - ஒரு புண்ணிய மிருகம்.
கட்டகக்கம்மம் - சிற்றறைகளாகச் செய்யப்பட்ட வேலைப்பாடு.
கட்டளை - உவமையாகச் செய்த உருவம், முதன்மை.
கட்டறிமகடூஉ - கட்டுவிச்சி.
கட்டி - சேர்கட்டி, வெல்லம்.
கட்டில் - அரசுகட்டில், ஒருவகை இருக்கை. [டுக் குறிபார்த்தல்.
கட்டு - காவல், முறத்தில் நெல்விட்
கட்டுரை - பொருள் பொதிந்த உரை. [கலைவகை.
கட்டுரை வகை - நன்றாகப் பேசும்
கடகம் - பரிசை, வளை. [தல்.
கடங்கழித்தல் - கடமையைச் செய்
கடத்தல் - வஞ்சியாது எதிர்நின்று அடுதல், வெல்லுதல்.
கடம் - கடமை, காடு.
கடவது - செய்யவேண்டியது.
கடவல் - செலுத்தல்.
கடவுட்காட்டல் - தெய்வாவேச முறுதல்.
கடவுட்டானம் - கடவுள் கோயில்.
கடவுட்பள்ளி - கோயில், முனிவர் ஆச்சிரமம்.
கடவுள் - தேவன், முனிவர்.
கடவோன் - செலுத்துவோன்.
கடறு - காடு.
கடன் - கடமை. [யுடைய யானை.
கடாஅக்களியானை - மதக்களிப்பை
கடாஅய் - செலுத்தி.
கடாரம் - பர்மா தேசம்.
கடாவல் - செலுத்தல்.
கடி - காவல், மணம், வேகம்.
கடிகை - துண்டம்.
கடிகையாரம் - பவளமாலை; நாழிகை எந்திரமுமாம்.
கடித்தகம் - யானையின் பின்புறத்தே தொங்கக் கட்டியிருக்கும் கேடகம் போன்றதொரு படை; உறையென்றும் கூறுவர்.
கடிது - விரைவு.
கடிப்பிணை - காதில் அணியும் ஆபரணங்கள் இரண்டு.
கடிப்பு - குறுந்தடி.
கடிறு - களிறு.
கடு - கடுக்காய்.

கடுக்கம் - விரைவு.
கடுங்கூட்டு - மருந்து.
கடுத்தல் - கோபித்தல்.
கடுத்தனர் - மிக்கனர்.
கடுநடை - விரைவான நடை.
கடுப்பு - வேகம்.
கடும்பகை - உட்பகை.
கடுமை - வேகம்.
கடுவளி - வேகமான காற்று.
கடுவன் - ஆண் குரங்கு. [வாயில்.
கடை - இடம், இறுதி, தாழ்வு,
கடைஇ - செலுத்தி, வினவி.
கடைசியர் - உழத்தியர்.
கடைத்தலை - வாயில். [ப்பு.
கடைப்பகச்செப்பு - கடைந்த செ
கடைமணை - வண்டியின் முன்னுறு
கடைமுகம் - வாயில். [ப்பு.
கடையெழுத்து - கையொப்பம்.
கண் - அழகு, அறிவு, இடம், கண்
ணோட்டம், கணு, மூட்டுவாய்,
வாத்தியத்தின் அடிக்கும் பக்கம்.
கண்டம் - கண்டத்திரை, திரைச்
கண்ணுலுறுத்தல் - பார்த்தல்.[சீலை.
கண்ணி - கருதி, தலையிலணியும்
மாலை, வலை.
கண்ணியம் - பெருமை.
கண்ணுளர் - சித்திரகாரர்.
கண்ணுளாளர் - சிற்பிகள்.
கண்ணென - விரைய.
கண்படை - கண்மூடித் தூங்கல்.
கண்பனி - கண்ணீர்த்துளி.
கண்பாடு - தூங்குதல்.
கண்பு - ஒருவகைக் கோரை.
கணக்குவரி - கணக்கெழுதிய வரி
கணங்குழை - திரண்டகுழை.[சை.
கணங்கொள்மன்னர் - சங்கமன்
கணங்கொள்ளல் - கூடுதல். [னர்.
கணம் - கூட்டம், க்ஷணம்.
கணி - சோதிடன். [கம்.
கணிகாசாரம் - கணிகையர் ஒழுக்
கணிச்சங்கம் - சோதிடர்களின்
சங்கம்.
கணிவாய் வேங்கை - கணியின்
தன்மையுள்ளவேங்கைமரம்,

கணை - அம்பு, திரட்சி.
கணையம் - அம்பு, யானையைத் தடுக்
கத்திகை - மாலை. [கும் மரம்.
கதம் - கோபம்.
கதலிகை - கொடி.
கதழ்தல் - விரைதல்.
கதழ்வு - வேகம்.
கதழ - சிறப்ப.
கதிய - கதுவிய.
கதிர் - ஒளி, கிரணம், சூரியன்.
கதிர்ச்செல்வன் - சூரியன்.
கதிர்த்தல் - வளப்படல்.
கதிரகம் - கீழ்த்திசை.
கதிரம் - கருங்காலி.
கதுப்பு - கூந்தல்.
கதுமென - விரைவாக.
கதுவாய் - குற்றம்.
கந்திரம் = கந்தருவம் - இசை.
கந்து - தூண்.
கந்துகம் - பந்து.
கப்பணம் - இரும்பாற்செய்யப்பட்ட
கப்பு - கிளை.[யானை நெருஞ்சிமுள்.
கபாலப்பள்ளி - கபாலிகமதத்தினர்
கபிலை - பசு. [உறையும் ஆச்சிரமம்.
கபோதம் - வீட்டின் ஓருறுப்பு.
கம்பல் (கம்பலை) - முழக்கம்.
கம்பிதம் - நடுக்கமுள்ள பாட்டு.
கம்புள் - சம்பங்கோழி.
கம்மம் = கர்மம் - சிற்பம், வேலைப்
கம்மர் (கம்மியர்) - சிற்பிகள். [பாடு.
கமர்தல் - விலக்கல்.
கயக்கம் - கலக்கம்.
கயக்கோழி - நீர்க்கோழி.
கயத்தி - இழிவுடையவள்.
கயந்தலை - யானைக்கன்று.
கயம் - குளம், பள்ளம், யானை.
கயமரம் - இழிந்தமரம், விறகுக்
காம் மரம். [ஒருவகை மீன்.
கயல் - எட்டு மங்கலங்களில் ஒன்று,
கயில் - மூட்டுவாய்.
காகம் - குடம். [பாத்திரம்.
காண்டம் - சுண்ணாம்பு வைக்கும்
காணச்சேடகம் - போர்த்தொழி
லுக்குரிய கேடகம்,

கரணம் - செயல்.
கரணயாப்பு - போர்க் கவசம்.
கரந்துறைகோள் - மறைந்துறை
யும் கிரகங்கள்.
கரந்தை - பசுக்களை மீட்டல்.
கரப்பறை - பிறரறியாதபடி ஒளித்
கரம் - வரி. [தற்குரிய அறை.
கரம்பு - பாழ்நிலம்.
கரீஇ - கருவி.
கருப்பாசம் - ஒரு காடு.
கரும்பின் ஊறல் - கருப்பஞ் சாற்
றிலிருந்து உண்டாகும் கள்.
கருமக்கட்டுரை-காரியத்தை விளக்
கும் சொல்.
கருமக் கடுக்கம் - காரிய விரைவு.
கருவி - கடிவாளம், கூட்டம், வாத்
தியத் தொகுதி
கருவிக்கரணம் - யாழ்வாசித்தல்.
கருவினை - விளையும் செயல்.
கரை - ஆடையின் கரை, நீர்நிலை
கரைதல் - சொல்லுதல்.[யின் கரை.
கல் - மலை. [ய்த்த ஆடை.
கல்லுண்கலிங்கம் - காவியில் தோ
கலங்கொடை - ஆபரணத்தைக்
கொடுத்தல்.
கலப்பேழை - ஆபரணப் பெட்டி.
கலப்பை - கலங்களை வைத்திருக்
கும் பை, கலவைச்சாந்து, பல
பொருட்டொகுதி.
கலம்-ஆபரணம், கப்பல், பாத்திரம்.
கலம்பூச்சரவம் - பாத்திரம் தேய்க்
கும் ஓசை
கலவம் - மயிலின் தோகை.
கலாஅம் - கலவும்.
கலாஅய் - கலந்து. [கலை, தோகை.
கலாபம் (கலாவம்) - ஒருவகை மே
கலாவேல் - போரிற் சிறந்த வேல்.
கலி - ஆரவாரம்.
கலிங்கம் - ஆடை. [ட்டி
கலிங்க வட்டி-ஆடைவைக்கும் பெ.
கலித்துறை - முழக்கத்தையுடைய
நீர்த்துறை.
கலிழ்ச்சி (கலிழ்தல்) - கலங்கியழு
கலினம் - கடிவாளம், [தல்.

கலுழன் - கருடன்.
கலுழி - வெள்ளம்.
கலை - ஆடை, ஆண் மான், கலவிக்
குரிய கரணம், சாஸ்திரம், மே
கவ்வை - முழக்கம். [கலை.
கவடு - கிளை.
கவயம் - கவசம்.
கவர்தல் - விரும்புதல்.
கவரி-ஒருவகை உபசாரப்பொருள்,
கவலை - கவர்த்த வழி. [கவரிமான்.
கவவல் - அகத்திடுதல், அணைத்தல்.
கவவு - தழுவுதல்.
கவற்சி - கவலை.
கவற்றல் - கவலையடையச்செய்தல்,
மயக்குதல், விரும்பச்செய்தல்.
கவற்றுவினை - சூதாடு தொழில்.
கவறு - கைம்மரம், சூதாடுகாய்.
கவாஅன் (கவான்) - தொடை.
கவிகை - இடக்கவிந்தகை, குடை.
கவிர் - முள்ளுமுருங்கை.
கவைஇ - பொருந்தி.
கவைஇய - சூழ்ந்த.
கவைமுட்கரீஇ - யானையை அடக்
கும் கருவிகளில் ஒன்று.
கழகம் - சூதாடும் இடம்.
கழங்கு - கழற்சிக்காய்.
கழஞ்சு - நிறுத்தலளவையுள்ஒன்
கழல் - பாதம், வீரக்கழல். [று.
கழறல் - இடித்துக் கூறுதல், கூறு
கழனி - வயல். [தல்.
கழி - கயிறு, கோல், மிகுதி.
கழி நுண்ணோர் - மிக நுண்ணிய
அறிவுடையோர்.
கழிப்படமாடம் - கால்களையுடைய
கழிப்பி - கழித்து. [கூடாரம்.
கழீஇ - கழுவி.
கழு - மூங்கிற் பிளப்பு.
கழுக்குநிரை - கழுகின் வரிசை.
கழுக்கொழுக்கு- கழுகின் செலவு.
கழுமல் - பொருந்தல்.
கழூஉச் செய்தல் - கழுவுதல்.
கழை - கரும்பு, மூங்கில்.
கள்ளடு மகடூஉ - கள்ளைக் காய்ச்
சும் பெண்.

களம் - நெற்களம், போர்க்களம்.
களமர் - நெற்களத்தில் வேலைசெய் [வோர்.
களர் - கரம்பு நிலம்.
களி - களிப்பு, மதம், மயக்கம்.
களிகை - கழுத்திலணியும் ஓர் ஆபர [ணம்.
களைஇயர் - களைக.
களைகண் - பற்றுக்கோடு.
கற்சிறைக் கோட்டம் - கல்லாற் செய்யப்பட்ட மதில் சூழ்ந்த கோயில்.
கற்படை - கல்லாலமைத்த சுவர்ப் [படை.
கற்பம் - கற்ப லோகம்.
கற்புடை விழுமீன் - அருந்ததி நக்ஷத்திரம்.
கற்றோய் கலிங்கம் - காவியில் தோ [ய்த்த ஆடை.
கறங்கல் - சுழலல்.
கறவை - பசு. [யுடையோர்.
கறுவுகொளாளர் - பகைமையை
கறை-உரல், கருமை.[யுள்ள யானை.
கறையடி - உரலைப்போன்ற அடி [ந்த நிலம்.
கன் - கல், தொழில்.
கன் முரம்பு - பருக்கைக்கல் நிறை
கன்றிய மன்னர்-கோபித்த அரசர்.
கன்னற்றுழவை - துழாவியட்ட இனிய அன்னம்.
கன்னிமை - கன்னித் தன்மை.
கன்னியாயம் - கன்னியர்களின் கூட்டம்.
கனங்குழை - கனவிய குழை.
கனலி - சூரியன், நெருப்பு.
கனற்றல் - சுடுதல், வருத்துதல்.
கனைதல் - மிகுதல்.
கா - சோலை, தோட்சுமை.
காஅய் - சுமந்து.
காஅழ் - மேகலை. [மேகலை.
காசு - குற்றம்,பொற்காசு, மணி,
காஞ்சியத் தெளிவு - காடியிலிருந்து உண்டாக்கும் கள்.
காஞ்சிரம் - எட்டி. [காவலாளர்.
காஞ்சுகி மாந்தர் - சட்டையிட்ட
காட்சி - அறிவு, காணப்படுவது.
காட்டல் - அறிவித்தல், கற்பித்தல், காணச் செய்தல்.
காட்டு - குப்பை,
காட்டுமா வல்சியர் - வனவிலங்கு [களை உண்போர்.
காடி-புளிங்காடி.
காண்பு - காட்சி.
காணம் - பொன்.
காணி - உரிய நிலம்.
காணிக - காண்க.
காணுதல் - செய்தல்.
காதலர் - அன்புடையோர், கண [வர், பிள்ளைகள்.
காதலி - மனைவி.
காதி - வினை.
காப்பர் - காவலாளர்.
காப்பியக்கோசம் - புஸ்தகங்கள் வைக்கும் பை. [வாசித்தல்.
காப்பிய வாசனை - காப்பியத்தை
காப்புக்கடம்-காத்தலாகிய கடமை.
காப்புப்பொறி - காப்பாக இடும் [முத்திரை.
காம்பு - மூங்கில்.
காமசரம் - மன்மத பாணம்.
காமர் - அழகு, விருப்பம்.
காமரு - விருப்பம் மருவிய. [யில்.
காமன் கோட்டம் - மன்மதன் கோ
காய்த்துணர் - காய்க்கொத்து.
காயம் - ஆகாயம், உடல்.
காயா - ஒரு மரம். [கும் வளம்.
கார்வளம் - மேகத்தினால் உண்டா
காரிகை - அழகு, நங்கை.
கால் - அடிப்பாகம், காம்பு, காற்று, சக்கரம், மழைக்கால், மூளைக் கால், வண்டி. [வேகமுடையவர்.
கால்கடியாளர் - காற்றுப்போன்ற
காலகூடம் - கூடபாகல மென்னும் பெயருடையதும் யானைக்கு வருவதுமாகிய ஒரு நோய்.
காலவிசில்லதர் - காலைவருத்தும் சிறிய வழி.
காலேந்திரம் - காலத்தைப் புலப் படுத்தும் இயந்திரம். [ளிர்.
காவலாட்டியர் - காவல்புரியும் மக
காவிதிக்கணம் - காவிதிப் பட்டம் பெற்றவர் கூட்டம்.
காவிதிப்பட்டம் - உழுவித்துண் போர்களிற் சிறந்தோர் அரசனாற் பெறுவதொரு பட்டம்; இதனை மகளிரும் பெறுவதுண்டு.

காழ் - ஆரம், காம்பு, குத்துக் கோல், கைம்மரம், கொட்டை, தூண், முத்துவடம், வடம், வயிரம், விதை.
காழ்ப்படல் - வயிரமுறுதல்.
காழகம் - கரிய ஆடை.
கான் - காடு, வாசனை.
கானம் - இசை, காடு, சோலை.
கானல் - கடற்கரை, மலையைச் சார்ந்த சோலை.
கிடங்கில் (கிடங்கு) - அகழி.
கிடுகு - கேடகம், மேற்றட்டி.
கிடை - கல்விச்சாலை, நெட்டி.
கிண்கிணி - காலில் அணியும் ஓர் ஆபரணம்.
கிம்புரி - குவளை, யானைத்தந்தத்
கிரந்தம் - நூல். [துக்கிடும் குவளை.
கிரிகை (கிரிசை) - கிரியை, தொ
கிழி - படம். [ழில்.
கிளத்தல் - வெளியாகச் சொல்லல்.
கிளரி - சொல்லி.
கிளவி - சொல்.
கிளைத்தல் - தோண்டல்.
கிளையில் மன்னர் - பகையரசர்.
கீத சாலை - ஸங்கீத சாலை.
குங்கும ஊறல் - குங்குமப்பூ ஊறிய செந்நீர். [திருக்கும் பரணி.
குங்குமக்குவை - குங்குமம் வைத்
குங்குமக்குழங்கல் - குங்குமக் குழம்பு. [வைக் குழைத்த குழம்பு.
குங்குமக்குழையல் - குங்குமப் பூ
குச்சரக்குடிகை - கூர்ச்சரதேயத்துச் சிற்பம் அமைந்த குடிசை.
குசைத்தொழில் - குதிரைக் கயிற்றைப் பிடித்து ஓட்டும் செய்கை.
குஞ்சம் - ஈயோட்டி.
குஞ்சரவேட்டம் - யானைவிருப்பம், யானை வேட்டையுமாம்.
குஞ்சரவேற்று - யானையேற்றம்.
குட்டம் - ஆழம், குளம். [கை.
குடங்கை - உள்ளங்கை, வளைந்த
குடம் - சிவிகையின் ஒருறுப்பு, தூணின் ஒருறுப்பு.
குடம்பை - கூடு.

குடவரை - அஸ்தகிரி. [இழுக்கு.
குடிக்கதுவாய் - குடிக்குண்டாகும்
குடிஞை - குடிசை, துலாமண்ட
குடுமி - உச்சி, தலை. [பம்.
குண்டகழ் - ஆழமான கிடங்கு.
குண்டலம் - ஒருவகைக் காதணி.
குண்டிகை - கமண்டலம்.
குண்டு - ஆழம்.
குத்திய - குத்துக் கோலுடனே
குந்தம் - கைவேல். [செய்த.
குப்பாயம் - கவசம், சட்டை.
குப்புறுதல் - குதித்தல்.
குப்பை - குவியல், மிகுதி.
கும்பம் - குடம், யானை மத்தகம்.
குமாரகாலம் - மகளிருடைய மனத்தைக் கவரும் கட்டழகு மிக்க காலம்.
குமிழ் குமிழ்த்தல் - பிறருக்குத் தோன்றாமல் மறைத்தல்.
குமிழ்த்தல் - கொப்புளித்தல்.
குமைத்தல் - அழித்தல். [தார்.
கும்மனத்தாளர் - வஞ்சமனத்
குய்வளம் - தாளிதத்தின் சிறப்பு.
குயம் - குசம்.
குயிலல் - அமைத்தல், இழைத்தல்,
குயிற்றல் - அமைத்தல், [பதித்தல்.
குரங்கல் - தாழ்தல், வளைதல்.
குரம் - குதிரையின் குளம்பு.
குரம்பை - குடிசை.
குரல் - கதிர், கொத்து.
குரவம்பாவை - குராமரத்தின் பாவைபோன்ற காய்.
குரவு - குராமரம்.
குரவை - ஒருவகைக் கூத்து.
குரால் - குராற் பசு.
குருகு - குருக்கத்தி, நாரை, பற
குருந்து - குருந்த மரம். [வை.
குரை : அசை.
குரைத்தல் - முழங்கல்.
குல்லை - கஞ்சங்குல்லை, துளவம்.
குலம் - கோயில், பரம்பரை.
குலா - வளைவு.
குலாஅய் - குலாவி, வளைந்து.
குலிகம் - சாதிலிங்கம்.

குவை - பரணி.
குவைக்களம் - கூட்டத்தையுடைய [இடம்.
குழங்கல் - சேறு.
குழல் - கூந்தல், கூந்தல் முடிக்கும் வகைகளுள் ஒன்று, வேய்ங்குழல்.
குழிசி - பானை.
குழீஇ - குழுவி, கூடி.
குழை - காதணி, தளிர்.
குழையல் - குழம்பு.
குளவி - காட்டு மல்லிகை.
குளிரி - செங்கழுநீர், பூந்தடுக்கு.
குளிவை - குளுவையென்னும் பற [வை.
குளிறல் - முழங்கல்.
குற்ற - பறித்த.
குற்றி - குறியவாயையுடைய பாத் [திரம்.
குற்று - பறித்து.
குற்றேல் - குற்றேவல்.
குறங்கு - துடை.
குறளி - குறிய வடிவமுடையவள்.
குறிப்புடை வெந்நோய்-காமநோய்.
குறிப்பெழுத் தோலை - சங்கேதமாக எழுதிய வாக்கியங்கள் அடங்கிய திருமுகம்.
குறுக்கை புக்க கொளு - புலி வடிவமைந்த மூட்டுவாய்.
குறுகல் - அடைதல்.
குறும்பர் - குறுநில மன்னர்,வேடர்.
குறும்பு - சிற்றரண், பாலைநிலத் தூர்.
குறும்பொறை - சிறிய பாறைகள்
குறுவியர் - சிறியவேர்வைத்துளி.
குறை - காரியம், குற்றம், துண் [டம்.
குன்றி - குன்றி மணி.
கூகை - கோட்டான். [ருத்துவாய்.
கூட்டம் - கூடுதல், புணர்ச்சி, பொ
கூட்ட மன்னர் - சங்க மன்னர்.
கூட்டு - கொள்ளை.[டின் ஒருபகுதி.
கூடம் - கப்பலின் மேற்றளம், வீட்
கூத்தப்பள்ளி - நாடகமாடும் இடம்.
கூத்தி - கூத்தாடுபவள்.
கூந்தற் பிச்சம் - மயிற் பீலியாற் கட்டப்பட்ட ஒருவகை விருது.
கூப்புதல் - கைகுவித்தல்.
கூம்பு - பாய்மரம்.
கூய் - கூவி.
கூர்ப்பு - மிகுதி.
கூரல் (கூருதல்) - மிகுதல்.
கூரி - மிக்கு. [பண்டம்.
கூலம் - அங்காடி வீதி, கரை, பல
கூல வாழ்நர் - பல பண்டம் விற் [கும் வணிகர்.
கூவல் - கிணறு.
கூவைச்சுண்ணம் - கூவைக் கிழ [ங்கு.
கூழ் - உணவு.
கூழ்படல் - கலக்கமுண்டாகல்.
கூழை - மயிர்.
கூற்பாதிரி - வளைவுள்ள பாதிரி [மலர்.
கூற்றம் - யமன்.
கூற்று - சொல், யமன்.
கூறுடாயம் - கூறுகூறாக நின்று விளையாடும் கூட்டங்கள்.
கூறை - ஆடை.
கெடிறு - ஒருவகை மீன்.
கெடுத்தல் - இழத்தல், தப்புதல்.
கெழீஇ - கெழுவி.
கெழுமல் - மயங்கல்.
கேண்ம் - கேளும்.
கேழ் - நிறம்.
கேள்வி - வீணை, வேதம்.
கேளன் மன்னன் - பகைமன்னன்.
கை - ஒப்பனை, காம்பு, பக்கம், பந்தடிக்குரிய பரிபாஷை.
கைதவம் - கபடம். [கும் சமயம்.
கைதூவமயம் - கையொழிந்திருக்
கைப்புழி - செலுத்துமிடம்.
கைபுனைதல் - அலங்கரித்தல், செப்பஞ் செய்தல்.
கைபோகல் - தேர்ச்சி பெறுதல்.
கைம்மாறல் - இடம் மாறுதல்.
கைம்மூதல் - கை, கையின் அடிப் [பக்கம்.
கையகலல் - நீங்கல்.
கையது வீழ்தல் - உறங்கல்.
கையரித்தல் - கையால் அரித்தல்.
கையறல் (கையறவு) - செயலறு [தல்.
கையாப்பு - கைக்கட்டு.
கையிகத்தல் - நீங்குதல்.
கைவரை - செயலின் அளவு,யானை.
கைவிதிர்த்தல் - கையை அசைத்தல்.

கைவினை - கைத்தொழில், சிற்பத் தொழில்.
கொகுடி - ஒருவகை முல்லை.
கொங்கு - தேன், பூந்தாது, மணம்.
கொட்டம் - ஒருவகைப் பெட்டி, ஒருவகை மரம், ஒழுகுதல்.
கொட்டாரம் - தானியக் களஞ்சியம்.
கொட்டில் - கூடாரம்.
கொட்டுமடி - கொட்டிமடித்த மடி.
கொட்டை - குமிழ், தாமரையினுட் கொட்டை, யானையின் அணி
கொட்பு - சுழற்சி. [விசேடம்.
கொடி - ஒழுங்கு, ஓராபரணம், கொழுந்து, வரிசை.
கொடிஞ்சி (கொடிஞ்சி) - தாமரை மொட்டின் வடிவமாகச் செய்யப் பட்டுத் தேரின்முன் நடப்பட் டுள்ளதோருறுப்பு.
கொடிப்படை - முன்படை.
கொடுக்கு - மண்டபத்திலுள்ள சிற்ப விசேடம்.
கொடுங்குழை - வளைந்த குழை.
கொடுப்பு - கொடுத்தல். [கடமை.
கொடைக்கடம் - கொடுத்தலாகிய
கொடையகத்தோன் - பொருளை வழங்கும் உள்ளத்தவன்.
கொண்டல் - கொள்ளுதல், மேகம்.
கொண்டு - தொடங்கி.
கொண்டோன் - கணவன்.
கொண்மூ - மேகம்.
கொந்து - கொத்து.
கொப்புள் - கொப்புளம்.
கொம்மை - குவிதல்.
கொய்யல் - கொய்யாமரம்.
கொல்லி - துடைக்குந் துணி.
கொல்லை - முல்லை நிலம்.
கொழுநன் - கணவன்.
கொள்கை - மேற்கோள், விரதம்.
கொள்ளாவேந்தன் - பகைவேந்
கொள்ளை - மிகுதி. [தன்.
கொளீஇ - கொண்டு, கொளுத்தி.
கொளு - பொருந்துவாய்.
கொளுத்தல் - பொருத்தல். [த்தல்.
கொளுவல் - கொளுத்தல், பொரு
கொளை - நாண்கட்டு.
கொற்றம் - அரசுரிமை.
கொற்றவி - அரசி.
கொற்றவை - துர்க்கை.
கோ - அரசன், மேன்மை.
கோங்கந்தட்டம் - கோங்கின் தட் டுப்போன்ற மலர்.
கோசம் - புத்தகம்.
கோசிகம் - பட்டு.
கோட்டகம் - குளம்.
கோட்டம் - கோயில், வளைவு.
கோட்டி - கூட்டம், கூடுமிடம்.
கோடணை - கோஷம்.
கோடல் - காந்தள், கொள்ளுதல்,
கோடி - முனை. [வாங்குதல்.
கோடிகம் - பூந்தட்டு.
கோடிகர் - ஆடை நெய்வோர்.
கோடித்தல் - அலங்கரித்தல்.
கோடியல் ஊர்தி - யானைத் தந்தத் தாற் செய்த வாகனம்.
கோடு - கரை, கொம்பு, நீர் வீசும் கொம்பு, யானைத் தந்தம்.
கோணச் சந்தி - வளைந்து கூடும் இடம்.
கோணம் - குறுந்தெரு, வளைவு.
கோணவட்டம், (கோணுவட்டம்) - ஒருவகை விருது.
கோணை - வன்மை.
கோதை - கூந்தல், மாலை.
கோப்பு - வரிசை.
கோப்பெருந்தேவி - பட்டமகிஷி.
கோபம் - இந்திர கோபப்பூச்சி.
கோம்பி - பச்சோந்தி.
கோமகன் - அரசன், தலைவன்
கோமாள் - அரசி, தலைவி.
கோய் - பரணி.
கோயில் - அரண்மனை, ஆலயம்.
கோல் - அம்பு, குத்துக்கோல், கொம்பு, செங்கோல், தடி, திர ட்சி, யாழ்நரம்பு.
கோலம் குயிற்றல் - அலங்கரித்தல்.
கோலவர் - கையிற் கோல்கொண்டு நிற்கும் ஏவலாளர். [கோபம்.
கோவம் - இந்திர கோபப்பூச்சி,

கோள் - கிரகம், குலை, கொள்கை,
கொள்ளுதல்.
கோற்றேன் - கொம்புத் தேன்.
கோற்றொடி - திரண்ட வளை.
கோறும் - கொல்வோம்.
கௌவை - மூழக்கம்.
சக்கரம் - ஆணை.
சங்க படவம் - ஒரு வாத்தியம்.
சங்கம் - கூட்டம், சங்கு.
சட்டகம் - சட்டம், வடிவு.
சண்டவேந்தன் - பிரச்சோதனன்.
சணுய் - கடலை.
சத்தி - கொடிநாட்டும் குழி, மா
டத்திலுள்ள சூலம். [குடம்.
சத்திக்குடம் - சூலம் நாட்டிய
சத்திமுகம் - நிலத்திலெழுதும் சித்
திரங்களுள் ஒன்று.
சதங்கைத்தாமம் - சதங்கைமாலை.
சதி - தாளவொற்று.
சதிரம் - சதுரம்.
சதுக்கம் - நாற்சந்தி.
சதுர்த்தியிருத்தல் - மணம்செய்து
நான்கு நாள் விரதம் இருத்தல்.
சதுரச்சந்தி - நாற்சந்தி.
சந்தப்பேழை - ஆடைப் பெட்டி.
சந்தம் - அழகு, சந்தனம். [தளிர்.
சந்தனக்குழை - சந்தனமரத்தின்
சந்தனக்குறை - சந்தனக் கட்டை.
சந்தனச் சார்வணை - சந்தனத்தாற்
செய்த சாய்பலகை. [தனம்.
சந்தனத் தேய்வை - அரைத்த சந்
சந்தனப்பீடிகை - சந்தனப் பலகை
யாற் செய்த ஆசனம்.
சந்தி - சந்து, தெருக்கள் கூடு
மிடம், முடக்கு.
சந்து - ஆபரணத்தின் மூட்டுவாய்,
சமம் - போர். [சந்தனம்.
சமரம் - போர்.
சமழ்த்தல் - நாணுதல்.
சமழ்ப்பு - ஒளி மழுங்கல்.
சமிதை - ஓமத்துக்குரிய விறகு.
சலம் - குற்றம், துக்கம்.
சவட்டல் - அழித்தல்.
சவரர் - வேடர்களில் ஒரு சாதியார்.

சனம் - மனிதர்கள்.
சாஅய் - மெலிவுற்று. [டம்.
சாத்து - கூட்டம், வணிகர் கூட்
சாத்துக்கோய் - சந்தனம் வைக்
கும் பரணி.
சாத்துவினைக் கம்மியன் - வாச
னைச் சந்தனத்தை அமைக்கும்
கைவினையுடையோன்.
சாதகப்பட்டிகை - சாதகமெழுதிய
சாதம் - பிறப்பு. [பத்திரிகை.
சாதர் - சாதராவென வழங்கும்
உயர்ந்த ஆடை.
சாதனை - சாதித்தல், பயிற்சி.
சாதிங்குலிகம் - சாதிலிங்கம்.
சாந்தம் (சாந்து) - சந்தனம்.
சாந்தம்மி - சந்தனக்கல்.
சாந்தாற்றி - ஒருவகை விசிறி.
சாபம் - வில்.
சாம்பல் - வாடல்.
சாய்ஞ்சு - சாய்ந்து.
சாய் - சாயல், மென்மை.
சாயல் - மென்மை.
சார் - பக்கம்.
சார்ங்கம் - மான், வில்.
சார்ச்சி - சார்தல்.
சார்வணை - சார்தற்குரிய அணை.
சாரணர் - ஒருவகைத் தேவசாதி
சாரி - உலாவுதல். [யார்.
சாரியை - கதி.
சாரியை விலக்கு - பகைவருடைய
கதியை விலக்குதல்.
சால் - படைச்சால்.
சால்பு (சால்வு) - தகுதி.
சாலி - அரிசி, ஒரு நாடு, நெல்.
சாலிகை - கவசம். [சோறு.
சாலி யாழ்பதம் - நெல்லரிசிச்
சாலேகம் - சாளரம், சிறுதேக்கு.
சாற்றல் - அமைத்தல், அறைதல்,
சாறு - விழா. [கூறுதல்.
சீக்கம் - உறி.
சிக்கரத் தெளியல் - உசிலம்பட்டை
அல்லது முருங்கைப்பட்டையிலி
ருந்து உண்டாக்கிய கள்.
சிகழிகை - மயிர்முடி.

சிகை - முச்சி, மயிர்.
சிங்கச்சுவணம் - உயர்ந்த ஒரு வகைப் பொன்.
சித்திக்கிழவன் - ஜினதேவன்.
சித்திரக்கண்டம் - சித்திரமெழுதிய திரை.
சித்திரக் கம்மம் - ஓவிய வினை.
சித்திரக் கிழி - சித்திரப் படம்.
சித்திரக் குரம் - அதிசய நடையினையுடைய குளம்பு.
சித்திரக் குலா - அழகிய வளைவு.
சித்திரக்கூடம் - சிற்பவினையமைந்த வீட்டின் பகுதி.
சித்திரம் - அலங்காரம், இரகசியம், ஓவியம், சிற்பம், விசித்திரம்.
சிதர் - வண்டு.
சிதர்தல் - சிதறுதல்.
சிந்துவாரம் - ஒருவகை நொச்சி.
சிப்பம் - சிற்பம்.
சிம்பு - சிலாம்பு.
சிம்புள் - சரபம்.
சிம்புளித்தல் - கண்ணை மூடுதல்.
சிரமம் - இளைப்பு.
சிரல் - மீன்கொத்திக் குருவி.
சில்கி - குறைந்து, சிலவாகி.
சில்லை - இழிவு.
சிலதர் - ஏவலாளர்.
சிலதி - ஏவன் மகள்.
சிலம்பல் - முழங்குதல். [கம்.
சிலம்பு - காலணி, மலை, மலைப்பக்
சிலை - மலை, வில், வில்லின் தழும்பு.
சிலைச்சாபம் - சிலையென்னும் மரத்தாற் செய்த வில்.
சிலைத்தல் - ஒலித்தல்.
சிலைப்பொறி - வில்விரேகை.
சிவணல் - ஒத்தல், கலத்தல்.
சிவிகை - பல்லக்கு. [ளுள் ஒன்று.
சிவிறிப் பொறி - நீர்வீசு கருவிக
சிற்பக்கயிறு - சிற்ப சாஸ்திரம்.
சிற்றாண் - சிற்றுண்டி.
சிறுக்கி - சிறுகச் செய்து. [கொடி.
சிறு செங்குரலி - கருந்தாமக்
சிறு சேடம் - ஒரு மலர்மரம்.
சிறுநன்று - சிறிய உபகாரம்.
சிறுமுதுக் குறைவி - இளம்பிராயத்திலேயே பேரறிவு வாய்க்கப் பெற்றவள். [பக்கம், வேலி.
சிறை - அணை, சிறகு, சிறைச்சாலை,
சிறைக்கோட்டம் (சிறைப்பள்ளி) - சிறைச்சாலை.
சின்னம் - பொற்பொடி.
சினம் - கோபம், வெம்மை.
சினவுநர் - கோபிப்போர்.
சினை - உறுப்பு, கருப்பம், கிளை,
சீத்தல் - ஒழித்தல். [முட்டை.
சீதம் - கருப்பஞ் சாற்றிலிருந்து உண்டாக்கும் கள், குளிர்ச்சி.
சீதை - ஒரு நதி.
சீதோதகை - ஒரு நதி.
சீப்பு - கதவுக்கு வலியாக உள் வாயிலே இடப்படும் மரம், மயிர்
சீயம் - சிங்கம். [வாரும் கருவி.
சீர் - அழகு, கனம், சிறப்பு, புகழ்.
சீர்க்கம் - சிற்ப விசேடம்.
சீர்ப்பு (சீர்மை) - சிறப்பு.
சீரை - மரவுரி.
சீலம் - உயர்ந்த ஒழுக்கம், யானை
சீறடி - சிறிய அடி. [யின் இயல்பு.
சுட்டி - முன்றலையில் அணியும் ஓராபரணம்.
சுட்டிச்சுண்ணம் - உடம்பைத் தூய்மை செய்தற்குரிய வாசனைப் பொடி. [வெயில்.
சுடர் - ஒளி, சூரியன், விளக்கு,
சுடர்தல் (சுடரல்) - ஒளி விடுதல்.
சுடர் மாட்டல் - விளக்கேற்றல்.
சுண்ணம் - சூர்ணம், வாசனைப்
சுணங்கு - தேமல். [பொடி.
சுதை - சுண்ணம்பு.
சும்மை - முழக்கம்.
சுமடு - சும்மாடு. [கவர்த்த வழி.
சுரக்கவலை - பாலைநிலத்திலுள்ள
சுரம் - பாலைநிலம்.
சுரிகை - உடைவாள்.
சுரிதல் - சுழிதல்.
சுருங்கை - சுரங்கம், நிலத்தினுட் செல்லும் வழி.
சுரும்பு - ஒருவகை வண்டு.

